கழக வெளியீடு-௪௪0.

# தமிழ்ப் புலவர் வரிசை

## முதற் புத்தகம்



ஆசிரியர் :

திரு. சு. அ. இராமசாமிப் புலவர்



:: திருநெல்வேலி, தென்னிந்திய ::
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி :: சென்னை 1.

# பதிப்புரை

" ஔவையோடு கம்பர் புகழேந்தி ஆற்றுதமிழ்ச்
சேவ்வைநலம் காண்டல் சிறப்பு."

முன்னேற்றத்தை விரும்பும் நாடுகள் எல்லாம் தத்தம் நாட்டுப் புலவர்கள் செய்தருளிய நூல்களை விருப்புடன் படித்தலும் படிப்பித்தலும் செய்கின்றன.

அத்துடன், அப்புலவர்கள் வரலாற்றைச் செம்மையாக உணர்ந்து அவர்தம் அறிவு, ஆண்மை, அன்பு, ஒழுக்கம், தந்நலமின்மை. தாய் மொழிப்பற்று, பிறர்க்கு உதவுதல், விடா உழைப்பு, அஞ்சாமை, வாய்மை, கடமை முதலிய நற்பண்புகளை மேற்கொண்டு நடத்தி நற்பயன் பெறுகின்றன.

அம்முறையில் நம் நாட்டுப் புலவர் பெருமக்கள் வரலாறுகளையும், அவர்கள் செய்தருளிய நூல்களையும் மாணாக்கர்கள் இளமையிலேயே கற்று அதன்படி ஒழுகுவது, நாட்டுக்கும், மொழிக்கும் செய்யும் நன்மையாகும்.

அத்துறையில் " தமிழ்ப் புலவர் வரிசை முதற் புத்தகமாக " இது வெளிவருகின்றது. இரண்டாம் புத்தக முதலியனவும் தொடர்ந்து வெளிவரும்.

இதன்கண் தமிழ் மூதாட்டி ஔவையார், கம்பர், புகழேந்தியார் என்னும் மூவர் வரலாறுகளும், பரவை வழக்காக வழங்கும் கதைகளும், பாடல்களும் உள்ளுறை நயங்களுடன் செவ்விய இனிய எளிய முறையில் சொல்லப்பெற்றிருக்கின்றன.

இதனை ஆசிரியர்களும், மாணாக்கர்களும், பொதுமக்களும் வாங்கிக் கற்றுப் புலவர் பெருமக்கள்பால் செய்யவேண்டிய நன்றியை நிறைவு செய்து எங்களை ஊக்குவார்களாக.

எங்கள் வேண்டுகோளின்படி இதனை ஆக்கித்தந்த திரு. சு. அ. இராமசுவாமிப் புலவர் அவர்களுக்கு எங்கள் நன்றியுரித்தாகுக.

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

## பொருளடக்கம்

# தமிழ்ப் புலவர் வரிசை

## முதற் புத்தகம்



### க. ஔவையார்

ஔவையார் என்று பெயர் விளங்கிய பெண்ணறிஞர்கள் ஒருவரே யன்றிச் சிலர் இருந்திருக்கக் கூடும் என்று அறிஞர்கள் எண்ணுகின்றனர். ஆனால், ஒவ்வொருவருடைய தனி வரலாறும் இன்னதுதான் என்று எவரும் ஐயமறத் துணிந்து முடிவுகட்டவில்லை. ஔவையார் என்னும் பெயருடன் ஒருவருக்குமேல் பெண்ணறிஞர்கள் இருந்திருப்பினும், அவர்களுடைய வரலாற்று நிகழ்ச்சிகள் ஒருவர் வரலாற்றில் மற்றொரு வர் வரலாறு கலந்து பின்னிக் கலம்பகமாகிவிட்டதென்பதுமட்டும் எவராலும் மறுக்கக்கூடாத உண்மை. சிலர் செய்யுள்நடை முதலியவற்றைக்கொண்டு காலப் பாகுபாடு செய்யலாமென்பர். ஒருவரே நீணாளிருந்து காலப்போக்கிற்கேற்பச் செய்யுள்கள் செய்திருக்கலாமாதலின், அப்பாகுபாடுகளெல்லாம் நிலைபெறக்கூடியன வல்ல என்பர் சிலர். ஆதலின், ஈண்டு ஔவையாரின் வரலாறு பொதுவாக எழுதப்பெறுகின்றது.

ஔவையாருடைய பிறப்பின் உண்மையும் அறிஞர்களால் தேற்றமாக உணரக்கூடாத நிலையிலிருக்கிறது. பிறப்பின் தன்மையும் வளர்ப்பின் உண்மையும் வாழ்வின் மேன்மையும் உலகில் வழங்குகின்ற

படியே ஈண்டும் சுருக்கமாகவும் விளக்கமாகவும் எழுதப் பெறுகின்றன.

## க. பிறப்பு

ஔவையார் மைசூரைச் சேர்ந்த தகடூர் என்னும் ஊரிலே யாளிதத்தன் என்பவருக்கு மகளாகத் தோன்றினார். அந்த யாளிதத்தன் எக்காரணத்தாலோ ஔவையாரை வளர்க்கவில்லை. அங்கு வாழ்ந்திருந்த பாணன் ஒருவன் ஔவையாரைப் பேணி வளர்த்தான். இப்பாணர்கள் அரசனால் ஆதரிக்கப்பெற்றிருந்தனர். இவர்கள் அரசன் முன்னிலையில் ஆடுவர்; பாடுவர். மற்றைய வேந்தர்கட்குத் தூது அனுப்ப நேரில், அரசன் இப்பாணர்களையே அனுப்புவான். இப்பாணர்கள் கல்வி கேள்விகளிற் சிறந்து செய்யுளும் தாமே இயற்றத் தக்க ஆற்றல் பெற்றிருந்தமையின், அரசன் இப்பாணர்களைப் பெரிதும் போற்றிக் காத்துவந்தான். இப்பாணர்கள் தம்மை உரிமையுடன் ஆதரிக்கும் அரசர்களையே அன்றிப் பிற அரசர்களிடமும் சென்று பாடிப் பரிசு பெறுவர். இப்பாணர்களின் பெண்கள் பாடினி, பாட்டி, விறலி முதலிய பெயர்களால் அழைக்கப் பெறுவர்.

மேற்கூறிய இயல்பு பொருந்திய பாணர்குடியில் வளர்ந்த ஔவையார், அக்குடிப் பண்பிற்கேற்ப ஆடல் பாடல் கல்வியறிவு முதலியவற்றில் சிறந்து விளங்கினார். ஔவையார் மங்கைப்பருவம் அடைந்தபோது அவருக்குத் திருமணஞ் செய்து வைத்தலுக்கு வளர்ப்புத் தாய் தந்தையர் எண்ணினர். ஔவையாரோ தமக்கு உலக வாழ்க்கையில் சிறிதும் நோக்கமில்லையென்பதை வெளிப்படையாகத் தெரியப்படுத்தினார். ஆயினும், ஔவையார்

கூறியதை எவரும் பொருட்படுத்தாமல் மணத்திற்கு ஏற்பாடு செய்தனர். மணமகளைக் காண்டற்கு மணமகனின் உறவினர் ஔவையார் இல்லத்திற்கு வந்தனர். ஔவையாரின் வளர்ப்புப்பெற்றோர் ஔவையாருக்குப் பலவகை நல்லணிகளைப் பூட்டி அழகு செய்தனர். ஔவையாரோ அவ்வணிகலன்களையெல்லாம் அகற்றி விட்டுக் கிழிந்த பழம்புடைவை யொன்றனை அணிந்து முக்காடிட்டுக்கொண்டு கூனிக் குனிந்த கோலத்தின ராய்க் கையில் தண்டொன்றைப் பிடித்து ஊன்றிக் கொண்டு தம்மைக் காணவந்தார் முன்னர்ச் சென்று நின்றனர். மணமகளைக் காணவந்தோர் மணமக ளுடைய கோலத்தைக் கண்டு அஞ்சித் தம் எண்ணத்தை வழுவவிட்டு நழுவிச் சென்றனர். அதன் பின்னர் எவரும் ஔவையாரை மணம்பேசத் துணிந்திலர். ஔவையார் கிழக்கோலம் பூண்ட நாள்தொட்டு ஔவையென்னும் பெயர் ஏற்பட்டு இளமையில் வழங் கிய பெயர் மறைந்தொழிந்தது. ஔவை என்னும் சொல் தாயையும் அகவை முதிர்ந்தாளையும் குறிப்பிடற் குப் பயன்படுத்தப்பெறும் ஒரு சொல்; இச்சொல்லே ஔவையாருக்கு என்ஞான்றும் நிலைபெறுவதாயிற்று.

ஔவையார் பிறப்பைப்பற்றி வழிவழியாக வழங் கும் வரலாறுவது :—முன்னாளில் நான்முகன் நிலவுலகில் வடமொழியையும் தென்மொழியையும் வளர்த்தற் பொருட்டு மறைமுறைப்படி ஒரு வேள்வி செய்தான். அவ்வேள்வியில் வைத்திருந்த குடத்திலிருந்து கலைமகள் தோன்றினள். அவளை நான்முகன் மணந்து கொண்டான். மற்றும் அக்குடத்திலிருந்து அகத்தியர் தோன்றினர். அவர் கடற்கன்னியை மணந்து பெருஞ் சாகரர் என்பவரைப் பெற்றார். அவர் திருவாரூர்ப்

புலைச்சியைச் சேர்ந்து பகவன் என்பவரைப் பெற்று, அவருக்கு எல்லாக் கலைகளையும் கற்பித்தார். அந்நாளில் தவமுனி என்பவர் அருண்மங்கையென்னும் பார்ப்பன மாதைச் சேர்ந்து ஒரு பெண்மகவைப் பெற்றுவிட்டு விராலிமலைக்குத் தவஞ்செய்யச் சென்றார்.

தவமுனிவர் தம் மனைவியோடு தவஞ்செய்யச் சென்றமையால், அவருடைய பெண்மகவை உறையூர்ப் பறையன் ஒருவன் வளர்த்துவந்தான். அக்காலத்தில் உறையூரில் மண்மாரி பெய்தது. தெய்வச்செயலால் அப் பெண் தவிர மற்றையோரனைவரும் இறந்தொழிந்தனர். பின்னர் அப்பெண் உறையூருக்கடுத்த மேலூரின்கண் நீதி ஐயர் என்னும் பார்ப்பனர் வீட்டில் வளர்ந்திருந் தாள். அப்போது பகவன் என்பவர் எல்லா நூல்களி லும் வல்லவராய்க் கண்டவர் அனைவரும் கொண்டாடத் தக்க நிலைமையில் விளங்கினர். அவர் இறைவ னெழுந்தருளியுள்ள இடங்களையெல்லாம் காணும் வேட்கைமிக்காராய் இறைவன் எழுந்தருளியுள்ள திருக்கோவில்களெல்லாவற்றையும் வழிபட்டு வணங் கிக்கொண்டு காசியை நோக்கிச் சென்றுகொண் டிருந்தார். வழியில் முற்கூறிய பெண் வளர்ந்து கொண்டிருந்த மேலூரில் ஒரு தருமச்சாலையிலே தங்கிச் சமையல் செய்துகொண்டிருந்தார். அப்போது அவ் விடத்திற்கு நீதி ஐயர் வீட்டில் வளர்ந்துகொண் டிருந்த அப்பெண் வந்தனள். அவளைக் கண்ட பகவன் தம்முடைய குலவொழுக்கத்திற்கு இழுக்கு நேர்ந்த தென்று எண்ணியவராய், ‘நீ புலைச்சியோ வலைச்சியோ அல்லது வேறெந்த இழிந்த குலமாதோ தெரியவில்லை. நான் சமையல் செய்துகொண்டிருக்கும் இந்த இடத் திற்கு ஏன் வந்தாய்?’ என்று கூறி அதட்டிச் சின

மிகுந்தவராய்த் தமது கையிலேயிருந்த சட்டுவத்தால் அப்பெண்மணியினுடைய தலையிலே இரத்தம் ஒழுகுமாறு அடித்து விரட்டினார். அப்பெண் அழுதுகொண்டே தன் இருப்பிடத்திற்குச் சென்று விட்டாள்.

பிறகு பகவன் மறுபடியும் நீராடிச் சமையல் செய்து உணவுகொண்டு தம்முடைய வழிப்பயணத்தை மேலுந் தொடங்கினார். அவர் காசியை அடைந்து கங்கையிற் படிந்து அங்கே சிலகாலம் வதிந்திருந்த பின் கங்கை நீரெடுத்துக்கொண்டு முற்கூறிய அறச்சாலையின்கண் வந்து முன்போல் தங்கினார். அது காலை நன்கு வளர்ந்து பருவமடைந்து அழகியாய் விளங்கிய அப்பெண் அப்போதும் அந்த இடத்திற்கு வந்தனள். பகவன் அந்தப் பெண்ணுடைய அழகினைக் கண்டு உள்ளந்திரிந்து அவள்பால் தணியாக் காதல் கொண்டார். இச்செய்தியை அறிந்த நீதி ஐயர் பகவனைக் கண்டு, 'நீர் என்னுடைய பெண்ணை மணம் புரிந்துகொண்டு இவ்விடமே இரும்' என்று இயம்பினார். அதற்குப் பகவன், 'தாம் கொண்டுவந்துள்ள கங்கை நீரினைக் கொண்டு சென்று இராமேசுரத்திலுள்ள இறைவனுக்கு நீராட்டிவிட்டு மீண்டுவந்து அவ்வாறே செய்கிறேன்' என்று கூறிச்சென்று கூறிய காரியத்தை முடித்துத் திரும்பிவந்தார்.

பகவனுக்கும் நீதி ஐயர் வீட்டில் வளர்ந்திருந்த பெண்ணுக்கும் திருமணம் சிறப்புடன் நடைபெற்றது. நான்குநாட் சடங்குகளும் நன்கு நடைபெற்றன. ஐந்தாம்நாள் மங்களநீராட்டுவிக்கும்போது பகவன் அப்பெண்ணினுடைய தலையிலே எண்ணெய் பெய்தற்கு அவளுடைய கூந்தலை வகிர்ந்தார். அப்

போது தாம் முன்பு சட்டுவத்தால் அடித்ததனுல் ஏற்பட்ட வடுவினைக்கண்டு ஐயங்கொண்டார். அப் பெண்ணினுடைய வரலாற்றை வினவினுர். உண்மை வரலாற்றை உணர்ந்து வருத்தங்கொண்டார். 'ஓ! ஓ!! நீ ஆதியளா?' என்று கூறிக்கொண்டே அவ் விடத்தில் நின்றும் ஓடினுர். அதுவே அவளுக்கு ஆதி என்று காரணப் பெயராயிற்று. இவ்வாறு அப் பெண்ணை விட்டு ஓடிய பகவன், பொழுது போன மையால் எதிரேயிருந்த பாணர் சேரியில் ஒரு மண்டபத் தில் தங்கியிருந்தார். அவரை விடாது பின் தொடர்ந்து வந்த ஆதியும் அவரைக் கண்டு, 'தெய்வச்செயலால் நம்மிருவருக்கும் இத்திருமணம் நிகழ்ந்திருக்க, நீவிர் என்னை நீத்துப்போதல் தக்கதாமோ? அன்றி அறத் துக்குத்தானும் ஏற்குமோ? நானும்மைப் பிரியேன். பிரிய நேரின் உயிர் வாழேன்!' என்று கூறினுள்.

பழவினையின் தொடர்பால் பகவன் அறிவிலும் ஆதியுரைத்தது தக்கதே என்று தோன்றிற்று. அவர் ஆதியைப் பார்த்து 'உனக்கு எம்மிடத்தில் அன் பிருக்குமானுல் நான் சொல்லுகிறபடியே கேட்க வேண்டும். அஃதாவது, உனக்குப் பிள்ளைகள் எங் கெங்கே பிறக்கின்றனவோ, அங்கங்கே அவைகளை அப்பொழுதே விட்டு விட்டு வருதல்வேண்டும். அதற்கு நீ உடன்படுவாயானுல் உன்னை யான் ஏற்றுக் கொள்ளுகிறேன்' என்று கூறினுர்.

பகவன் கூறியதற்கு ஆதி உடன்பட்டாள். இருவரும் அம்மண்டபத்தில் சிலகாலம் தங்கியிருந் தார்கள். அப்போது நான்முகன் அருளால் ஆதி கருவுற்று ஒரு பெண் குழந்தையைப் பெற்றெடுத்

தாள். அப்போது ஆதியானவள் இக்குழவியை யாவர் காப்பாற்றுவரோ என்று நினைந்து அதனை விட்டு நீங்குதலுக்கு உளங்கவன்றனள். அதுகாலை அக்குழந்தை தாயை நோக்கி,

“ இட்டமுடன் என்தலையில் இன்னபடி என்றெழுதி
விட்டசிவ னுஞ்செத்து விட்டானோ—முட்டமுட்டப்
பஞ்சமே யானாலும் பாரமவ னுக்கன்னாய்
நெஞ்சமே அஞ்சாதே நீ ”

[இட்டம்-விருப்பம்]

என்று கூறிற்று. அதனைக் கேட்ட தாய் வருத்தம் நீங்கிக் குழந்தையைப் பிரிந்து சென்றனள். பின்பு அக்குழந்தையைப் பாணர் சேரியிலுள்ள பாணர்களெடுத்து வளர்த்தனர். அக்குழந்தை கலைமகளின் கூருகையால் இயற்கையாக எல்லாக்கலைகளையும் இனிதுணர்ந்து அறிவாற்றல் நிரம்பி விளங்கிற்று. அப்பெண்ணின் தன்மையைப் பார்த்தோர் ஒளவையார் என்று பெயர் வழங்கினர்.

ஒளவையாரைப்பற்றி மற்றொரு வரலாறும் பின் காணுமாறு வழங்கி வருகின்றது : முன்னாளில் வேதமொழி என்று பெயருடைய ஒரு பெரியவர் இருந்தார். அவருக்குப் பேராளி என்று பெயருடைய ஒரு மகன் இருந்தான். அம்மகனுக்குப் பன்னிரண்டாம் அகவை நடந்துகொண்டிருந்தபோது, அவ்வூரிலே இழிந்த குலத்தான் ஒருவன் வீட்டிலே ஒரு பெண் குழந்தை பிறந்தது. வேதமொழி அப்பெண்ணைத் தம் மகனுக்குப் பின்னாளில் திருமணம் செய்யலாமென்று எண்ணினார். அப்பெண்பிறந்த அன்று மாலையில், அது பிறந்த வீட்டின்மீது விண்மீன் ஒன்று எரிந்து வீழ்ந்தது. இதனைக் கண்டோர் இது தீமைக்கு அறிகுறி என்று எண்ணிய

வர்களாய் அப்பெண்குழந்தையின் தந்தையை அழைத்து, 'உன்னுடைய பெண் குழந்தை உயிரோடிருந்தால் இந்த ஊரே அழிந்து போகும். வருகிற தீமை உன் குழந்தை தலையோடு போகவேண்டுமானால் உன் குழந்தையை உயிரோடு வைக்காமல் உடனே தொலைத்துவிடவேண்டும். என்ன சொல்லுகிறாய்?' என்று கேட்டனர். அதற்கு அவன் 'குழந்தையைக் கொலைபுரிவது தக்கதன்று; குழந்தையை உயிரொடு அகற்றிவிடுகிறேன்' என்று கூறிச் சிறிய தெப்பமொன்று கட்டி, அதில் குழந்தையை வைத்துக் காவேரி வெள்ளத்தில் விட்டு விடுவதாகக் கூறி, அவ்வாறே செய்யத் தொடங்கினான்.

அவ்வாறு அவன் செய்யத் தொடங்கியவுடன், வேதமொழி தம் புதல்வனைப் பார்த்து, 'அக்குழந்தையின் உடலில் ஏதேனும் அறிகுறி இருக்கிறதா பார்த்து வா' என்று கூறி அனுப்பினார். அவன் சென்று பார்த்துவிட்டுத் திரும்பி வந்து, அக்குழந்தையின் தொடையில் ஒரு கறுப்பு மச்சம் இருக்கிறதென்று இயம்பினான். காவிரி வெள்ளத்தில் விடப்பட்ட குழந்தையை வெள்ளம் அடித்துக்கொண்டு சென்றது. காவிரியாற்றின் கரையில் ஒரு பார்ப்பனன் இறைவனை எண்ணி வழிபட்டுக்கொண்டிருந்தான். தெப்பம் ஒன்று நீரில் வருவதைக்கண்டு, அவன் அருகிற் சென்று பார்த்தான். குழந்தை தெப்பத்தில் நகைத்துக்கொண்டிருந்தது. மக்கட் பேறில்லாத அம்மறையவன் இறைவன் நமக்கு இக்குழந்தையை இனிதளித்தான் என்று எண்ணி, உவகைப்பெருக்குடன், அக்குழந்தையை வீட்டிற்கு எடுத்துக்கொண்டுபோய் இனிது வளர்த்து வந்தான்

வேதமொழியின் புதல்வனாகிய பேராளி, தக்க *அகவை எய்தியபின் தீர்த்தயாத்திரை செய்துகொண்டிருந்தான். ஒருநாள் அவன் தற்செயலாக மேற்கூறிய பெண் வளர்ந்துகொண்டிருந்த பார்ப்பனனுடைய இல்லத்திலே வந்து தங்கினான். பேராளியின் நற்பண்புகள் அப்பார்ப்பனனுக்கு இனிது பிடித்திருந்தது. அவன் பேராளியைப் பார்த்து, 'நீ என்னுடைய பெண்ணை மணஞ்செய்துகொண்டு இங்கேயே இரு' என்று கூறினான். அப்பெண்ணின் பேரழகில் மயங்கிய பேராளியும் அதற்கு இணங்கினான். அப்பால் இருவருக்கும் திருமணம் இனிது நிறைவேறியது. சில நாட்கள் சென்றன. ஒரு நாள் பேராளியின் மனைவியாகிய அப்பெண் நீராடிவிட்டு உடையுடுத்தும்போது அவளுடைய தொடையிலிருந்த மச்சத்தைப் பேராளி கண்டான். அவனுக்கு முன்னைய நிகழ்ச்சிகளெல்லாம் நினைவிற்கு வந்தன. அவளுடைய வரலாறு யாதென்று அப்பெண்ணை வினவினான். அவள் கூறிய விடை அவனுக்கு மன நிறைவை உண்டாக்கவில்லை. இவள் முன்பு ஊருக்கு ஆகாதவளென்று கைவிடப்பட்டவளாயிற்றே. இவள் ஆதியள் என்பதை நாம் அறியாமற் போயினோமே என்று எண்ணி, அவளை விட்டுவிட்டு ஓடலானான். அப்பெண்ணும் அவனைப் பின்தொடர்ந்து வீட்டிற்கு வருமாறு வற்புறுத்தியழைத்தனள். அவனைத் திரும்பிப்பார்க்காமல் அவன் ஓடிவிட்டான். துக்கத்தில் மூழ்கிய அப்பெண் தன்னை வளர்த்தவன் வீட்டிற்குத் திரும்பாமல் அழுதுகொண்டே பேராளி சென்ற வழியே சென்றாள். அப்போது வழியில் எதிர்ப்பட்ட ஒரு பார்ப்பனன், அப்பெண்ணினுடைய நிலை

* அகவை—வயது.

மையைக்கேட்டு வருந்தி அவளைத் தெளிவித்துத் தன்னு டைய பெண்களுடன் வளர்த்துவந்தனன். சில காலத் திற்குப்பின் அப்பார்ப்பனனுக்குச் சாங்காலம் எய்தியது. அப்போது அவன் தனக்கிருந்த பொருளைத் தன் பெண் கட்குப் பங்கிட்டுக் கொடுத்தான். இந்த வளர்ப்புப் பெண்ணுக்கும் ஒரு பங்கு கொடுத்தான்.

அப்பார்ப்பனன் இறந்த பிறகு, இந்தப்பெண் தனக்கு அகப்பட்ட பொருளை யெடுத்துக்கொண்டு அதைத் தருமவழியிற் செலவிடவேண்டும் என்னும் எண்ணத்துடன் காசிக்கு அருகே போய் ஓர் அறச்சாலை ஏற்படுத்தித் தான் அதிலிருந்துகொண்டு காசிக்குப் போவோருக்கும் வருவோருக்கும் உணவு முதலியன உதவி, அறஞ்செய்துகொண்டிருந்தாள். வந்து தங்கு வோரிடத்திலெல்லாம் தன் வரலாற்றையெல்லாம் கூறுவதுடன், அவர்களுடைய வரலாறுகளையும் கேட்டுப் பொழுது போக்கிக்கொண்டிருந்தாள்.

அவளை மணஞ்செய்து விட்டுவிட்டு ஓடிப்போன கணவன் ஒருநாள் அந்த அறச்சாலையில் வந்து தங்கினான். ஒருவரை யொருவர் இன்னாரென்று தெரிந்துகொள்ள வில்லை அப்பெண் வழக்கப்படி அவனையும் உணவு முதலியவைகளால் போற்றியபின் எல்லோருடனும் கூறும் தன் வழக்கப்படி அவனிடமும் தன் வரலாற் றைக் கூறினாள். அப்பார்ப்பனன் எல்லாவற்றையும் கேட்டுவிட்டு ஒன்றுஞ் சொல்லாது அன்றிரவு உறங்கு பவன்போல் படுத்திருந்துவிட்டு, மறுநாள் அதிகாலையிற் புறப்பட்டுச் சந்தடியின்றித் தனது பயணத்தைத் தொடங்கினான். இவன் செய்கையைப் பார்த்த அப் பெண், "'போய் வருகிறேன்,' என்று ஒரு சொல் கூடச் சொல்லாமல், என் கணவன் என்னை விட்டு ஓடிப்

போனதுபோலப் போகிறீரே. நான் உமக்குச் செய்த குற்றம் யாது ?" என்று வருந்திக் கேட்டாள். பார்ப்பனன் அவள் நிலைமைக்கு இரங்கி, உண்மையை மறைக்க மாட்டாமல், 'தானே அவள் கணவன்' என்று தன் வரலாற்றைக் கூறி அவளை மனைவியாக ஏற்றுக்கொண்டான். பிறக்குங் குழந்தைகளை அவ்வவ்விடங்களிலேயே விட்டுவிட்டு வந்துவிட வேண்டுமென்று தன் மனைவியுடன் உடன்பாடு செய்துகொண்டான். அவளும் இணங்கினாள். அவர்களுக்கு ஏழு குழந்தைகள் பிறந்தன. அவைகளில் முதலில் பிறந்தவர்தான் ஔவையார்.

இவ்வாறு ஔவையாரின் பிறப்பைப்பற்றிப் பல கதைகள் வழங்குகின்றன. எல்லாவற்றினுடைய முடிபு மட்டும் ஒரேதன்மையில் முடிகிறது. இவைகளில் எதையும் நாம் உண்மையென்று கோடற்குத்தக்க ஆதாரங்கள் இல்லை. இனி ஔவையாரின் வாழ்க்கை வரலாற்றைப்பற்றிக் கூறுவோம்.

## உ. கருநெல்லிக்கனி பெறுதல்

ஔவையார் வாழ்ந்திருந்த நாளையில் சேரநாட்டின் ஒருபகுதியில் விளங்கிய தகடூர் என்னும் ஊரின்கண் அதியமான் நெடுமான் அஞ்சி யென்னும் ஓரரசன் அரசு செய்திருந்தனன். அவன் கடையெழுவள்ளல்களில் ஒருவன் ; வீரம் மிகுந்தவன் ; தீரம் சிறந்தவன் ; பெரும் படை வீரர்களையுடையவன் ; சிற்றரசரும் பேரரசரும் ஆகிய ஏழு அரசர்களை வென்றவன். அவனது வண்மையை அறிந்த ஔவையார் அவனிடம் பரிசில்பெற எண்ணினார். அவனையடைந்து புகழ்ந்து பாடினார். அவன் ஔவையார் இடத்திற் பேரன்பு காட்டினான்.

ஔவையாருக்குப் பரிசில் அளித்தால் நம்மைப் பிரிந்து சென்றுவிடுவாரே யென்று எண்ணிப் பரிசிலளியாது நீட்டினான். ஔவையாரோ அதியமானது உள்ளக் கருத்தை உணராது, 'இவறன்மையினால் பரிசிலளியா திருக்கின்றான்' என்று மாறுபடக் கருதினார். அவருக்குச் சீற்றம் ஏற்பட்டது. அதியமானிடம் அறிவிக்காமலே புறப்பட்டார். வாயில் காவலாளனைக் கண்டார். அவனிடம் தாம் புறப்பட்டுச் செல்வதாகவும் தம் தன்மையை அறிந்து போற்றக்கூடியவர்கள் பரந்த உலகிலே பலர் இருக்கின்றனரென்றும் கூறினார். இவருடைய சீற்றத்தையும் செலவையும வாயிற்காவலாளன் அதியமான் நெடுமானஞ்சிக்கு அறிவித்தான். அதியமான் ஔவையார் முனிவிற்கு அஞ்சினான். விரைந்து வந்து ஔவையாரைக் கண்டான். அவருடைய சினந் தணியுமாறு பலகூறி வேண்டிக்கொண்டான். தன்னுடைய கொடைமன்றத்திற்கு அழைத்துக்கொண்டு சென்றான். ஔவையார் மனங்களிக்குமாறு பலவகைப் பரிசில்களைப் பேருவகையுடன் அளித்தான். அரும்பெரும் வள்ளன்மை படைத்த அதியமான் பரிசில் நீட்டித்தானென்று முனிந்தோமே என்று நாணினார். அதியமானது அருமைமிக்க பண்புகளை நன்குணர்ந்த ஔவையார் அதியமானிடமே அதிகநாள் தங்கினார். அந்நாளில் ஒரு முனிவர் அதியமானைக் காணுதற்கு வந்தார். அவர் ஓர் அரிய கருநெல்லிக் கனியைக் கொணர்ந்து அரசனுக்குக் காணிக்கைப் பொருளாக வழங்கினார். அந்நெல்லிக்கனி கிடைத்தற்கரியது. உண்டாரை நீண்டநாள் நரை திரை மூப்பு முதலியன அண்டாது பாதுகாக்கும் அரும்பெருஞ் சிறப்பு வாய்ந்தது.

தனக்கென வாழாப் பிறர்க்குரியாளனாகிய அதியமான், அக்கனியைத் தானுண்ண விரும்பாது, உலகத்திற்கு மிகுதியும் நன்மை விளைக்கத்தக்க ஒருவருக்கே அளிக்க வேண்டுமென்று எண்ணினான். அத்தகைய பண்புடையார் யாரென்று அதியமான் ஆராயுங்கால், ஔவையாரே உலகிற்குப் பெரிதும் பயன்படத் தக்கவரென்று உறுதியாக உள்ளத்தறிந்தான். அக்கனியின் தன்மையைப் புலப்படுத்தாமலே அதனை ஔவையாருக்களித்தான். அவரும் அதனை உண்டு மகிழ்ந்தார். அதன் பின்னரே அதியமான் அக்கனியின் சிறப்பினை ஔவையாருக்குப் புலப்படுத்தினான். அதியமான் கூறியதைக் கேட்ட ஔவையாருக்கு, அவன்மேல் நன்றிப்பெருக்குக் கரைபுரண்டோடத் தொடங்கிவிட்டது. அவர் உடனே, 'வீரச் செல்வமுடைய அதியமானே! பெரிய மலையுச்சியிற் பெற்ற பெறுதற்கரிய நெல்லிக்கனியினது பெருமையைச் சிறிதும் புலப்படுத்தாது, அதன் தன்மையையெல்லாம் நின்னுள்ளத்தின்கண்ணே வைத்துக்கொண்டு, எமது சாக்காடு நீங்கும் வண்ணம் எமக்களித்தாய். ஆகையால் நீ பால்போலும் வெள்ளிய பிறைத்திங்களைத் தம் தலையில் தாங்கியவனும் அழகிய கரிய கழுத்தையுடைய சிவபெருமான் போல நெடுங்காலம் வாழ்வாயாக' என்னும் பொருளை யமைத்து,

"வலம்படு வாய்வாள் ஏந்தி ஒன்னார்
களம்படக் கடந்த கழல்தொடித் தடக்கை
ஆர்கலி நறவின் அதியர் கோமான்
போரடு திருவிற் பொலந்தார் அஞ்சி
பால்புரை பிறைநுதற் பொலிந்த சென்னி
நீல மணிமிடற் றொருவன் போல
மன்னுக பெரும நீயே தொன்னிலைப்
பெருமலை விடரகத் தருமிசைக் கொண்ட

*சிறியிலை நெல்லித் தீங்கனி குறியாது*
*ஆதல் நின்னகத் தடக்கிச்*
*சாதல் நீங்க எமக்கீத் தனையே"* (புறம்-௯௧.)

என்று புகழ்ந்துபாடினார். ஔவையாருக்கும் அதியமானுக்கும் நாளடைவில் நட்பு வளர்ந்து வந்தது. பற்பல பாடல்களை அதியமான்மீது பாடி அவனை மகிழ்வித்துக்கொண்டிருந்தார்.

## ௩. தொண்டைமான்பால் தூது

ஔவையார் அதியமானுடன் தங்கியிருக்குங் காலத்திலே தொண்டைமான் என்னும் அரசன் காஞ்சி நகரினை ஆண்டுகொண்டிருந்தனன். அத் தொண்டைமான் தனக்குள்ள படைப்பெருக்கின் இறுமாப்பால் அதியமானைத் தன்னினும் இளைத்தவனாக வெண்ணினான். அவனோடு போர் தொடுத்தற்கு அமயம் நோக்கியிருந்தான். அதியமான் தொண்டைமானுடைய உள்ளக் கிடக்கையை ஒருவாறுணர்ந்திருந்தான். ஆகவே அவன் தன் ஆற்றலையும் பெருமையையும் தொண்டைமானுக்குத் தெரியப்படுத்த எண்ணினான். சென்று தெரியப் படுத்துவதற்குத் தக்க ஆற்றலும் அஞ்சாமையும் யாருக்குள்ளதென்று எண்ணினான். ஔவையாரே இக் காரியத்திற்கு முற்றிலும் பொருத்தமானவர் என்று முடிவுசெய்தான். தன்கருத்தை ஔவையாருக்குத் தெரியப்படுத்தினான். ஔவையாரும் மிகுந்த மகிழ்ச்சியுடன் ஒருப்பட்டுத் தொண்டைமானிடத்திற்குச் சென்று அவனுடைய விருந்தாளியாகச் சில பகல் தங்கியிருந்தார். அவர் தாம் மேற்கொண்டுள்ள காரியத்தை முற்றச் செய்தலுக்கு அற்றம் நோக்கியிருந்தார்.

ஒரு நாள் தொண்டைமான் தன்னுடைய படைப் பெருக்கை ஔவையாருக்குப் புலப்படுத்த எண்ணினான். ஔவையாருக்கு அரண்மனைக் காட்சிகளையெல்லாம் காட்டினன். அரண்மனையின் பல விடங்களையும் ஔவையாருக்குக் காட்டிவிட்டு, இறுதியில் தனது படைக்கலச்சாலைக்கு அழைத்துக்கொண்டுபோய் அங்கிருந்த போர்க்கருவிகளை ஔவையாருக்குக் காட்டினான். அங்கிருந்த போர்க்கருவிகளெல்லாம் நெய் பூசப் பட்டும் உறையில் இடப்பட்டும் பலவிதமாக அழகு செய்யப்பட்டும் வைக்கப்பட்டிருந்தன. தாம் வந்த காரியத்தை முடித்தற்கு நேரம் வந்ததென்று கண்ட ஔவையார் உடனே தொண்டைமானைப் பார்த்தார். அவன் செருக்கடங்குமாறு "இந்தப் போர்க் கருவிகளெல்லாம் போரிற் பயன்படுத்தப்பெறாமல் மயில்பீலி யணியப்பட்டும், மாலை புனையப்பட்டும், திரண்ட காம்பு திருத்தி நெய் தடவப்பெற்றும் பாதுகாப்பினையுடைய அரண்மனைக்கண்ணே பயனின்றிக் கிடக்கின்றன. தனது செல்வத்தைப் பலருக்கும் பகுத்தளித்துண்ணும் வள்ளன்மையையுடைய எம் அதியமானது போர்க் கருவிகள் போரின்கட் பகைவரைத் தாக்கியமையின் கங்கும் நுனியும் ஒடிந்து, ஒழுங்கு செய்தற்பொருட்டுக் கொல்லனது பணிக்களத்தை யடைந்திருக்கின்றன" என்னும் கருத்தை அமைத்து,

" இவ்வே, *பீலி யணிந்து மாலை சூட்டிக்
கண்டிரள் நோன்காழ் திருத்திநெய் யணிந்து
கடியுடை வியனக ரவ்வே யவ்வே
பகைவர்க் குத்திக் கோடுநுதி சிதைந்து
கொற்றுறைக் †குற்றில மாதோ என்றும்

---

* இவ்வே-இவையே.

† கொல்துறை-கொல்லன் உலைக்களம்.

உண்டாயிற் பதங்கொடுத்து
இல்லாயின் உடனுண்ணும்
இல்லோ ரொக்கல் தலைவன்
அண்ணலெங் கோமான் வைந்நுதி *வேலே" (புறம்-கூ)

என்று தொண்டைமானுடைய படைக்கலத்தை இகழ்ந்தும் அதியமானுடைய படைக்கலத்தைப் புகழ்ந்தும் பாடினார். இதனைக்கேட்ட தொண்டைமானுடைய தருக்கடங்கிற்று. அவன் அதியமான் பெருமையை அறிந்து அடங்கினான்.

## ச. வெற்றியைப் பாடல்

அக்காலத்தில் திருக்கோவலூர் அரசனாகவிருந்த மலையமான் திருமுடிக்காரி என்பவன் பல அரசர்களையும் போரில் வென்று பெருமிதங்கொண்டிருந்தான். அதனை அறிந்தான் அதியமான். அவனது ஆற்றலையும் பெருமிதத்தையும் அடக்கி யொடுக்க விரும்பினான். நால்வகைப் படைகளோடுஞ் சென்று திருக்கோவலூரைத் தாக்கிக் கடும்போர் புரிந்தான். அப்போது, பலவுயிர்கள் இறத்தற் கிரங்கிய ஔவையார் போரை நிறுத்தற்கு எண்ணினார். மலையமானையும் அவனது துணை வீரர்களையும் நோக்கி, அதியமானது வாளின் வன்மையையும் வேலின் திண்மையையும் யானைப்படைகளின் தீரத்தையும் குதிரைப்படைகளின் வீரத்தையும் எடுத்துக் கூறி, மலையமானுக்கும் அவன் துணைவர்களுக்கும் பலவகையான அறிவுரைகளைப் புகன்றார். அவர்கள் ஔவையாரின் அறிவுரைகளைக் கேளாமலும் அழியும் உயிர்களுக்கு இரங்காமலும் போர்புரிந்தனர். அதியமான் அஞ்சியின் கை ஓங்கியது. மலையமானும்

* வைந்நுதி-கூரிய முனை.

அவன் துணைவர்களும் அதியமான் அஞ்சிக்கு அஞ்சிப் புறங்கொடுத்தோடி மறைந்தனர். திருக்கோவலூர் அதியமானது ஆட்சிக்குள்ளாகியது. அதியமானுடைய இந்த வெற்றியை ஔவையார்,

" அமரர்ப் பேணியும் ஆவுதி யருத்தியும்
அரும்பெறன் மரபிற் கரும்பிவண் தந்தும்
நீரக விருக்கை யாழி சூட்டிய
தொன்னிலை மரபினின் முன்னோர் போல
ஈகை*யங் கழற்கால் இரும்பனம் புடையல்
பூவார் காவிற் புனிற்றுப்புலால் நெடுவேல்
எழுபொறி நாட்டத் தெழாஅத் தாயம்†
வழுவின் றெய்தியும் அமையாய் செருவேட்டு
இமிழ்குரல் முரசின் எழுவரொடு முரணிச்
சென்றமர் கடந்துநின் னாற்றல் தோற்றிய
அன்றும் பாடுநர்க் கரியை இன்றும்
பரணன் பாடினன் மற்கொன் மற்றுநீ
முரண்மிகு கோவலூர் நூறிநின்
அரண் அடு திகிரி யேந்திய தோளே " (புறம்-௯௯)

எனப் புகழ்ந்து பாடினர். அதியமானஞ்சியால் தோற்கடிக்கப்பட்டுத் தனது கோவலூரை யிழந்த மலையமான், இழந்துபோன தனது நகரை மீளவும் எவ்வாறாயினும் கைப்பற்றிக்கொள்ள வேண்டுமென்று முடிவு செய்தான். அதன்பொருட்டுத் தனக்குத் துணை தேடினான். பல தடவையும் போரில் தன் துணை பெற்றவனும் நல்ல வீரனுமாகிய பெருஞ்சேரலிரும் பொறையை அடைந்து தனக்கு உதவி செய்யுமாறு வேண்டினான். அவனும் இணங்கினான். இருவரும் சேர்ந்து வல்வில்லோரி என்னும் வள்ளலின் கொல்லி மலையை முதற்கண் கைப்பற்ற வேண்டுமென்று முடிவு

* ஈகை-பொன் † தாயம்-உரிமை

செய்து கொல்லி மலையை முற்றுகையிட்டனர். வல்வில்லோரி மலையமானுக்குப் பகைவனாகிய அதிய மானஞ்சியைத் துணைக்கு அழைத்தான். அதியமான் உடனே தன் நண்பர்களாகிய சோழனையும் பாண்டி யனையும் தன்னோடு சேர்த்துக்கொண்டு ஓரியின் கொல்லி மலைக்கு வந்து பெருஞ்சேரலோடும் மலையமானோடும் பெரும்போர் நிகழ்த்தினான். அப்போரில் பெருஞ்சேரல் அதியமானையும் சோழ பாண்டியரையும் வென்று விரட்டிவிட்டு, அவர்களது முரசையுங் குடையையுங் கவர்ந்துகொண்டதன்றி, ஓரியைக் கொன்று கொல்லி மலையையுங் கைப்பற்றிக்கொண்டான்.

## ரு. போர்க்கு ஊக்கல்

பெருஞ்சேரலால் தோற்கடிக்கப்பட்ட அதிய மான் தகடூர் போய் மதிலின் உள்ளே யிருந்தான். மலையமானும் பெருஞ்சேரலும் படையைத் தகடூர்க்கு நடத்தி மதிலை வளைத்துக்கொண்டனர். அதியமான் சோழ பாண்டியர்களின் துணையிருந்தபோதே வெல்ல முடியாத பெருஞ்சேரலைத் தனியே யெதிர்த்துத் தன்னால் தோற்கடிக்க வியலாது என்று முடிவுசெய்து தன் பகைவர்களை யெதிர்க்கவில்லை. ஔவையார் அதியமான் தன் பகைவர்களை எதிர்க்காது இருத்தலைக் கண்டார். போரில் ஊக்கமேற்படத்தக்க பல அறி வுரைகளைப் புகன்று அதியமான் போரில் மனவெழுச்சி கொள்ளுமாறு செய்தார்.

## சா. அதியமான் பிரிவுக்கு ஆற்றாது பாடல்

ஔவையாரின் உரையால் அதியமான் வீரங்கிளர்ந் தெழுப் போர்முனையில் புலிபோற் பாய்ந்தான். இருகட்சியினருக்கும் கடும்போர் நடந்தது. இறுதியில்

பெருஞ்சேரல் விடுத்த கூரிய வேலொன்று கூற்றுவனைப் போல் வந்து அதியமான் அஞ்சியின் நெஞ்சிற் பாய்ந்து ஊடுருவிச் சென்றது. அதியமான் தேரில் வீழ்ந்து உயிர் துறந்தான். அதியமானைப் போரில் ஊக்கிய ஔவையார் ஆறாத் துன்பமடைந்தார். அவர், " சிறிய அளவினையுடைய தேனைப் பெறும்போதெல்லாம் தானுண்ணாது எமக்கே தருவான். மிகுந்த அளவினை யுடைய தேனைப்பெற்றானாயின், நாங்களுண்டு மகிழ்ந்து பாட மிகுதிப்பட்ட தேனைத் தானும் உண்ணுவான். சோறு சிறிதாக உள்ளபோதும் மிகப்பல கலத்தோடும் பலரோடும் உண்பான். உணவிருக்கும் இடங்கள் எல்லாவற்றையும் நாங்கள் உண்டுகளிக்க எங்களுக்கே அளிப்பான். அம்பும் வேலும் தைத்து உருவு மிடங்க ளெல்லாம் தான் சென்று நிற்பன். நரந்தம்பூ நாறும் தன்னுடைய கையால் புலால் நாறும் எம்முடைய தலையைத் தடவி அன்புசெய்வான். அதியமான் இறக்குமாறு அவன் மார்பின்கண் தைத்த வேல் அவ் வளவில் மாத்திரம் தைத்த தன்று. அது பாணருடைய மண்டைப் பாத்திரத்தின் தொளையில் ஊடுருவி, இரப் போரது கையினுள்ளும் தைத்துருவித், தன்னாற் காப் பாற்றப்பெறும் சுற்றத்தாரது கண்ணின் கருமணிப் பாவை ஒளி மழுங்க, அழகிய நுண்ணிய சொல் லாராய்ச்சியுடைய புலவரது நாவின்கண்ணேயும் போய் விழுந்தது. எமக்குப் பற்றுக்கோடாகிய எம்மிறைவன் யாண்டுள்ளான் ? இனி இவ்வுலகத்தின்கண் பாடு வாரும் இல்லை. பாடுவார்க்கொன்றைக் கொடுப்பாரு மில்லை. குளிர்ந்த நீர்த்துறைக்கண்ணே பூக்கும் பகன் றைப்பூப் பிறராற் பறித்துச் சூடப்பெறாமல் வீணே தொலைந்தாற்போல, பிறர்க்கு ஒரு பொருளைக்

கொடாது மாய்ந்து போகும் உயிர்கள் மிகப்பல; அத் தன்மை பொருந்தியவனே எம்முடைய அரசன்,'' என் னும் பொருளை அமைத்து,

"சிறியகள் பெறினே எமக்கீயும் மன்னே
பெரியகள் பெறினே
யாம்பாடத் தான்மகிழ்ந் துண்ணும் மன்னே
சிறுசோற்றானு நனிபல கலத்தன் மன்னே
என்பொடு தடிபடு வழியெல்லாம் எமக்கீயும் மன்னே
அம்பொடு வேல்நுழை வழியெல்லாந் தானிற்கும் மன்னே
நரந்தம் நாறுந் தன்கையாற்
புலவுநாறும் என்றலை தைவரும் மன்னே
அருந்தலை யிரும்பாணர் அகன்மண்டைத் துளையுரீஇ
இரப்போர் கையுளும் போகிப்
புரப்போர் புன்கண் பாவை சோர
அஞ்சொல் நுண்டேர்ச்சிப் புலவர் நாவிற்
சென்றுவீழ்ந் தன்றவன்
அருநிறத் தியங்கிய வேலே
ஆசா கெந்தை யாண்டுளன் கொல்லோ—இனிப்,
பாடுநரும் இல்லை பாடுநர்க்கொன் றீகுநருமில்லைப்
பனித்துறைப் பகன்றை நறைகொண் மாமலர்
சூடாது வைகி யாங்குப் பிறர்க்கொன்
றீயாது வீயும் உயிர்தவப் பலவே,'' (புறம்-உ௩௫)

என்னும் பாடலைப் பாடி வருந்தினர்.

## எ. பொகுட்டு எழினியைப் போற்றல்

அதியமான் இறந்த பின்னர் அவன் மகன் பொகுட் டெழினி முடிசூடினன். அவன் மிக இளைஞனாக விருந்தமையால் ஔவையார் சின்னாள் அவனுக்குச் சூழ்ச்சித் துணையாக நின்று அரசியல் காரியங்களைச் செய்யுமாறு செய்தார். பொகுட்டெழினியும் தந்தை யைப்போன்றே கொடையிலும் நடையிலும் சிறந்து

விளங்கினன். ஔவையார் அதியமானைப் புகழ்ந்து பாடியதைப்போலவே பொகுட்டெழினியையும் பாடிச் சிறப்பித்திருந்தார். பின்னர் ஔவையார் தமிழ் நாடு முழுவதும் சுற்றித் தமிழ் நாட்டரசர்களையெல்லாம் காண விழைந்தார். பொகுட்டெழினியிடம் அரிதில் விடை பெற்றுப் பயணப்பட்டார்.

## அ. வள்ளுவன்பால் யானை பெறல்

நாஞ்சில் மலைக்கு உரியவனும், சேரன் படைத் துணைவனும் வள்ளுவர் குடியிற் பிறந்தவனும் ஆகிய நாஞ்சில் வள்ளுவனைக் கண்டு, உணவுக்குச் சிறிது அரிசி வேண்டுமென்றார். அவன் அறிஞரின் அளவறிந்து கொடுக்கும் அருங்குணச் செம்மலாதலால், இவர் கேட்டபடி அரிசியளியாது யானையொன்றைக் கொடுத்தான். அவனது செய்கையைப் புகழ்ந்து பாடினர்.

## கூ. மூவேந்தரையும் வாழ்த்துதல்

நாஞ்சில் வள்ளுவனைப் பாடிய பின்னர் ஔவையார் மேற்குக் கடற்கரைக்கணுள்ள கொண்கான நாட்டு ஏழிற்குன்றத்தை யடைந்தார். அதனை அக்கால் ஆட்சிபுரிந்துகொண்டிருந்த அரசனைக் கண்டு புகழ்ந்து பாடினர். அவ்வரசன் புலவர்களின் புகழை யறியாத புல்லன். ஆகவே, அவன் அரிதாகக் கிடைத்த பாட்டையும் ஒரு பொருட்படுத்தவில்லை. ஔவையார்க்குப் பரிசிலும் அளிக்கவில்லை. அவன் செய்கை ஔவையார்க்குச் சீற்றத்தை உண்டுபண்ணிற்று. அவர் உடனே,

" இருடீர் மணிவிளக்கத் தேழிலார் கோவே
குருடேயு மன்றுநின் குற்றம்—மருடீர்ந்த
பாட்டு முரையும் பயிலா தனவிரண்(டு)
ஒட்டைச் செவியும் உள,"

என்று அவனை இகழ்ந்து பாடிவிட்டு அவ்விடம் விட்டுச் சென்றார். சோழநாட்டில் உள்ள உறையூரில் பெருநற்கிள்ளி என்னும் சோழவரசன் இராசசூய வேள்வி செய்கின்றான் என்று தெரிந்தது. ஆங்குச் சென்றார். வேள்விச்சாலையில் சேரமான்மாரி வெண்கோவும், பாண்டியன் உக்கிரப்பெருவழுதியும் வந்து சோழனோடு ஒருங்கமர்ந்திருந்தனர். மூவேந்தரும் முத்தீயைப்போல ஒருங்கமர்ந்திருந்தது ஒளவையார்க்கு மிகுந்த வியப்பை விளைத்தது. மூவரசரையும் ஒருங்குசேர வாழ்த்தினார். மூவேந்தரும் ஒளவையாரைப் பெரிதும் போற்றினார். ஒளவையாரும் வேள்வி முடியும்வரை ஆண்டே தங்கியிருந்தார். வேள்வி முடிந்தபின் சோழன் ஒளவையாருக்குப் பெரும் பரிசில் அளித்தான். அங்கிருந்து புறப்பட்டுப் பாண்டிநாட்டின் பலவிடங்களிலும் சுற்றிக் கொண்டு, அருணகிரிநாதர்போன்ற அருட்பெரியார்களின் திருவாக்காலும் புகழப்பெற்ற பெரும்பேற்றினையுடைய பாரி வாழ்ந்திருந்த பறம்புமலையை அடைந்தார்.

## க௦. பாரியொடு பழகல்

பாரியைக் கண்டார். பாரி கடையெழுவள்ளல்களிலே யொருவன். அவனுடைய அருங்குணமும் செயலும் ஒளவையாரை மகிழ்வித்தன. அவ்வாறே ஒளவையாரிடத்திலும் பாரி அளவிலா அன்புகொண்டான். ஒளவையாரைவிட்டுப் பிரிவது பாரிக்கு இயலாததாகவிருந்தது. அவன் ஒளவையாருக்கு அளவற்ற பரிசுகள் வழங்கிச் சிறப்புச் செய்தான்.

ஔவையார் அடிக்கடி பாரியிடம் சென்று பலநாள் அளவளாவியிருந்தும்கூடப் பாரிக்கு ஔவையார் மாட்டிருந்த ஆர்வம் ஒருசிறிதும் குறையவில்லை. ஒரு முறை பாரி ஔவையாருக்குப் பரிசும் விடையும் அளித்து அனுப்பியபின், அவனுடைய மனம் தகுந்தபடி ஒருப் பட்டிருக்கவில்லை. அதனால் வருந்திய அவன் சிலரை யழைத்து, ஔவையார் கொண்டுசெல்லும் பரிசிற் பொருள்களை வழிமறித்துக் கொள்ளையடித்துக் கொண்டு வந்துவிடுங்களென்று கட்டளையிட்டான். அவர்களும் ஔவையாரை வழிமடக்கி அவர் கொண்டு சென்ற பொருளைப் பறித்துக்கொண்டு வந்துவிட்டனர். பொருளையிழந்த ஔவையார் மீண்டும் பாரியிடம் வந்து பன்னாள் தங்கியிருந்தார். அப்போது பாரி, பொருளைப் பறிக்கச்செய்தது தானேதான் என்னும் செய்தியை வெளியிட்டான். பாரியின் அன்புத்திறத்தை யறிந்த ஔவையார் அவன்மாட்டு முன்னிலும் பன் மடங்கு அன்புகொண்டார்.

## கக. காரியின் களைக்கட்டு

அந்நாளிலே பழையனூர் என்னும் ஊரிலே காரி என்னும் பேருடைய வேளாளன் ஒருவன் இருந்தான். அவனும் ஔவையாரிடத்திலே பேரன்பு கொண்டவன். ஔவையாரை விட்டுப் பிரிய விருப்பம் இல்லாதவன். ஔவையார் ஒருபோது அவனிடத்திற்குச் சென்றார். சிலநாள் தங்கியிருந்தார். ஒருநாள் காரியிடம் சென்று, தாம் சென்றுவருவதாகக் கூறினார். அப்பொழுது அவன் தன் நிலத்திலே களை பிடுங்கிக்கொண்டிருந்தான். ஔவையார் சொல்லுதலைத் தவிர்க்க எண்ணினான். அவன் தன் கையிலிருந்த களைக்கட்டினை ஔவையா

ரிடம் தந்து, ‘களைகட்ட இந்த நிலத்தை அளப்பாயாக’ என்று கூறிவிட்டுச் சென்றவன், ஔவையார் இனி மேல் இன்றைக்குச் செல்லுதற்குப் பொழுதில்லை யென்பதனை அறிந்த பின்னரே ஔவையாரிடம் வந்தான். காரியின் சூழ்ச்சி ஔவையாருக்குத் தெரிந் தது. அவனுடைய அன்புத்திறத்தைத் தம்முடைய உள்ளத்திலே பெரிதுங் கொண்டாடி மகிழ்ந்தார்.

## கஉ. பாரிமகளிர் பண்பு

பாரியின் சீர்த்தி அந்நாளிலேயே யாண்டும் பரவி யிருந்தது. பாரியினிடத்திலே அழுக்காறு கொண்டிருந்த மூவேந்தரும் அவனுடைய பெண்களைத் தமக்கு மணஞ் செய்து தருமாறு கேட்டனர். பாரியோ, ‘ஈத்துவக்கும் இன்பம் அறியா’ அம் மன்னர்கட்குத் தம் அருமைப் பெண்களை மணஞ்செய்து கொடுத்தலுக்கு மறுத்து விட்டான். இதனாற் பெரும்போர் மூண்டது. இறுதியில் பாரி வள்ளலை மூவேந்தரும் கொன்றுவிட்டனர். பாரி யின் அவைக்களப் புலவராகிய கபிலர் பாரியின் பெண்க ளாகிய அங்கவை சங்கவை என்னும் மங்கையர் இருவரையும் அழைத்துச் சென்று திருக்கோவலூரின் கண் பார்ப்பனர் பாதுகாப்பில் இருத்தியிருந்தார். இச் செய்தியை ஔவையார் அறியார். அவர் தமது நோக்கப் படி பலவிடங்களையுஞ் சுற்றிக்கொண்டு திருக்கோவ லூரை யடைந்தார். பொழுதுபோய் இராக்காலமாக இருந்தது. பெருமழையும் பொழியலாயிற்று. ஔவையார் மழையில் நனைந்து வருந்தி ஓர் இல்லத்தை யடைந்தார். ஔவையாருடைய உடல் மழையில் நனைந்து கிடுகிடென்று நடுங்கிக்கொண்டிருந்தது. அவ் வில்லத்தில்தான் பாரியின் பெண்களும் இருந்தனர்.

ஆனால், ஔவையாரும் பாரிமகளிரும், இரவாகையால், ஒருவரையொருவர் அறியவில்லை. ஔவையாரைக் கண்டதும் பாரியின் மகளிர் மனம் குழைந்தது. பெருங் கொடையாளியின் பெண்களாகிய அவர்கள் உள்ளங் குழைவதற்குக் கேட்கவும் வேண்டுமா? அவ்விள நங்கையர் இருவரும் உடனே தம்மிடம் இருந்த நீலச் சிற்றுடை யொன்றை ஔவையாருக்களித்து, அவர்தம் ஈர உடையைக் களைந்து அவர் உடல் ஈரத்தையும் துடைத்துக் குளிரைப் போக்கினா.

ஒருகாலத்தில் சேரமான் மாவெண்கோ என்பவன் ஒரு பெருவிருந்து செய்தான். அவ்விருந்துக்குப் பலர் வந்திருந்தனர் எல்லோரும் உண்டிவகைகள் படைக்கப் பட்டிருந்த இலையில் அமர்ந்தனர். ஒருவருக்கு இலை இல்லை. உட்கார்ந்திருப்பவர்களில் ஒருவரை எழச் செய்தால்தான் அதிகப்படியாகவுள்ள ஒருவருக்கு இலை கிட்டும். எவரை எழுப்பலாம் என்று சேரமான் எண்ணமிட்டான். ஔவையார் கண்ணுக்குத் தெரிந் தார். தான் அவரை யழைத்துத் தன்னுடன் இருத்திக் கொண்டால் ஓர் இலை அகப்படுமென்று முடிவு செய்தான். உடனே 'ஔவையே, இங்கு வாராய்! என்று அழைத்தான். ஔவையாரும் எழுந்து அவனிடம் சென்றார். இலையகப்படாதிருந்தவருக்கு இலை யகப் பட்டது. சேரமான் ஔவையாரோடு அளவளாவி உடனுண்டான் சேரமானுடைய அந்த அன்புரையும் ஔவையார் உள்ளத்திலே படிந்திருந்தது. ஆனால் ஔவையாரின் குளிரைப் போக்குதற்கு அம்மகளிர் நீலச்சிற்றுடை யளித்தகாலை அம்மங்கையருடைய தலை சிறந்த பேரன்பே ஔவையார் உள்ளத்தில் அதிக உவ கையை உண்டுபண்ணிற்று. பாரி பிறரை யேவிப்

பொருளைக் கவர்ந்த அன்பும், காரி களைக்கட்டளித்துப் பயணத்தைத் தடை செய்த அன்பும், சேரமான் 'ஔவையே இங்கு வாராய்' என்று அழைத்த அன்பும் ஆகிய மூன்றுமே நீலச்சிற்றுடை வழங்கிய அன்பு ஒன்றுக்குத்தான் நிகராகும் என்னும் பொருளை யமைத்து,

"பாரி பறித்த கலனும் பழையனூர்க்
காரி கொடுத்த * களைக்கட்டும்—சேரமான்
வாராயோ என்றழைத்த வாய்மையும் இம்மூன்றும்
நீலச்சிற் றுடைக்கு நேர்."

என்னும் வெண்பாவைப் பாடினர். பாரிமகளிர் ஔவை யாருக்கு அடிசில் படைத்து, அதற்குத் தாம் சமைத் திருந்த கீரைக் கறியைப் பரிமாறித் தம்முடைய பழைய நிலைமையையும் அப்போதிருந்த நிலைமையையும் எண் ணிப் பெரிதும் வருந்தினர். ஔவையார் அம்மங்கையர் கீரைக் கறியைப் படைக்க நேர்ந்ததற்காக வருந்து கின்றார்களென்று உணர்ந்துகொண்டார். அம்மங்கை யாரின் அன்புப் பெருக்கு ஔவையாரைப் பெரிதும் கவர்ந்துவிட்டது. உடனே,

"வெய்தாய் நறுவிதாய் வேண்டளவுந் தின்பதாய்
நெய்தான் அளாவி நிறையிட்டுப்—பொய்யே
அடகென்று சொல்லி அமுதத்தை இட்டார்
கடகஞ் செறியாதோ கைக்கு"

என்னும் அரிய வெண்பாவைப் பாடி அம்மங்கை யருக்கு மகிழ்ச்சியை விளைவித்தார். சிறிது நேரத் தில் மழை நின்றது. விண் விளங்கியது. முழுத்திங்கள் பால்போல் தண் கதிர் பரப்பி ஒளிசெய்தது. உயிர்கட்கு இன்பத்தை விளைவிக்கும் அந்த நேரம் பாரிமகளிர்கள்

*களை எடுக்குங் கருவி

இருவருக்கும் துன்பத்தை விளைவித்தது. முன்னிகழ்ந்த முழுத்திங்கள் நாளையில் தங்கள் நாட்டில் தமருடன் இனிது மகிழ்ந்திருந்த வாழ்க்கை நிலைமையை அவர்கள் எண்ணியபோது அவர்களுள்ளத்தில் ஆருத்துயருண்டாயிற்று. அம்மகளிர் இருவரும் கல்வியறிவில் மிகவுஞ் சிறந்தவர்களாதலின்,

> "அற்றைத் திங்கள் அவ்வெண் நிலவின்
> எந்தையும் உடையேம், எங்குன்றும் பிறர்கொளார்
> இற்றைத் திங்கள் இவ்வெண் நிலவின்
> வென்றெறி முரசின் வேந்தர்எங்
> குன்றுங் கொண்டார்யாம் எந்தையும் இலமே" (புறம்-கஉ)

என்று ஒரு செய்யுளைப் பாடினர். அப்பாடலைக் கேட்டார் ஔவையார். அம்மங்கையர் பாரியின் பெண்கள் என்பது அப்போதுதான் ஔவையாருக்குத் தெரிந்தது. அவர் அவர்களைக் கட்டிக்கொண்டு ஓவென்றலறியழுதார். மங்கையரும் ஔவையாரைத் தெரிந்துகொண்டு வருந்தினர். கபிலர் இறந்ததும் ஔவையாருக்குத் தெரிந்தது. எவ்வாறேனும் அம் மங்கையர்களை அரசன் ஒருவனுக்கு மணஞ்செய்து வைக்கவேண்டுமென்று அவர் முடிவு செய்தார்.

## கூ. பாரிமகளிர் திருமணம்

அப்போது திருக்கோவலூரை ஆண்டிருந்த மலையமான் தெய்வீகன் என்னும் மன்னனிடம் சென்று பாரிமகளிரை மணஞ்செய்து கொள்ளுமாறு கூறினர். அவன் பாரியின்பால் மூவேந்தரும் கொண்டிருந்த பகைமையைக் குறிப்பிட்டுத், தான் அம்மங்கையரை மணந்தால் தனக்குக் கெடுதி வருமென்று கூறி மறுத்தான். ஔவையார் மூவேந்தரையும் அங்கு வர

வழைத்து அவர்களைக்கொண்டே திருமணத்தை நடத்தச் செய்கிறேன் என்று கூறினார். மூவேந்தரை வரும்படி அழைத்தற்கு முடங்கல் எழுதினார்.

சேரனுக்கு எழுதியது

*சேரலர்கோன் சேரன் செழும்பூந் திருக்கோவல்*
*ஊரளவுந் தான்வருக உட்காதே [1]—பாரிமகள்*
*அங்கவையைக் கொள்ள அரசன் மனமிசைந்தான்*
*சங்கவையை யுங்கூடத் தான்.*

சோழனுக்கு எழுதியது

*புகார்மன்னன் பொன்னிப் புனனாடன் சோழன்*
*தகாதென்று தானங் கிருந்து—நகாதே*
*கடுக வருக கடிக்கோவ லூர்க்கு*
*விடியப் பதினெட்டாம் நாள்."*

பாண்டியனுக்கு எழுதியது

*வையைத் துறைவன் மதுரா புரித்தென்னன்*
*செய்யத் தகாதென்று தேம்பாதே [2]—தையலர்க்கு*
*வேண்டுவன கொண்டு விடியவீ ரொன்பானாள்*
*ஈண்டு வருக இசைந்து.*

ஔவையார் முடங்கலை அரசர்கள் மூவருங் கண்டனர். ஔவையாரின் அழைப்பை மறுப்பின் யாது வசை பாடுவாரோ என்று அஞ்சினர். மங்கையர்க்குத் தக்கவரிசைக ளெடுத்துக்கொண்டு விரைந்து திருக்கோவலூரை யடைந்தனர். திருமணம் பெருஞ் சிறப்புடன் நிகழ்ந்தது. ஔவையார் மூவேந்தரையும் விருந்துண்ணவேண்டினர். அவர்களும் இசைந்தனர். எங்கட்கு உணவுடன் பனம் பழம் பரிமாற வேண்டுமென்றனர். காலமோ பனை காய்க்கத் தொடங்கும் காலம். ஆயினும் ஔவையார் சிறிதும் திகைக்காமல் அப்படியே பரிமாறுகிறேன்

1. உட்கு-நாண். 2. தேம்பாதே-குறைநினையாதே.

என்று உடன்பட்டார். அவ்விடத்தில் பனைமரத்தின் துண்டு ஒன்று கிடந்தது. அதனை யெடுத்து நிலத்தில் நட்டு,

திங்கட் குடையுடைச் சேரனும் சோழனும் பாண்டியனும்
மங்கைக் கறுகிட வந்துநின் றூர்மணப் பந்தலிலே
சங்கொக்க வெண்குருத் தீன்றுபச் சோலை சலசலத்து
நுங்குக்கண் முற்றி அடிக்கண் கறுத்து நுனிசிவந்து
பங்குக்கு மூன்று பழந்தர வேண்டும் பனந்துண்டமே

என்று ஒரு செய்யுளைப் பாடினர். ஔவையார் திருமொழி பயன் தருந் தன்மை பொருந்திய சிறந்த திருமொழி யாகையால், உடனே அப்பனந்துண்டம் வெண் குறுத்துவிட்டு ஓலை வளர்ந்து காய்க்கத் தொடங்கிக் காய்த்து முற்றி மூன்று பழங்களை யுண்டாக்கிற்று. செயற்கரும் அந்தச் செய்கையைக் கண்டு மூவேந்தர்களும் மற்றும் கூடியிருந்த மக்களும் மிகுந்த இறும்பூதெய்தினர். ஔவையார் செய்கை அரசர் மூவருக்கும் அச்சத்தையும் விளைத்தது. ஔவையார் திருமணத்திற்கு வந்திருந்தோர் அனைவருக்கும் பெருமகிழ்ச்சி யுண்டாமாறு அரிய விருந்தளித்தார். அவ்விருந்திற்குப் பெண்ணையாறு பாலாகவும் நெய்யாகவும் பெருகி வருமாறு,

"முத்தெறியும் பெண்ணை முதுநீர் அதுதவிர்ந்து
தத்திவரு நெய்பால் தலைப்பெய்து—குத்திச்
செருமலைத் தெய்வீகன் திருக்கோவ லூர்க்கு
வருமளவிற் கொண்டோடி வா"

என்று வெண்பா ஒன்றைப் பாடினர். அவ் ஆறு ஔவையார் விருப்பப்படி அவ்வாறே வந்து மக்கள் அனைவருக்கும் ஆரா இன்பத்தையளித்தது. ஔவையார் அத்திருமணத்திற்குப் போந்திருந்த வறியவர் அனைவர்க்கும் பொருளளிக்க நினைந்து,

"கருணையால் இந்தக் கடலுலகம் காக்கும்
வருணனே மாமலையன் கோவல்—பெருமணத்து
நன்மாரி தான்கொண்ட நன்னீர் அதுதவிர்த்துப்
பொன்மாரி யாகப் பொழி"

என்று வருணனை நோக்கிப் பாடினார். உடனே ஊர் முழுவதற்கும் பொற்காசு மழை பெய்தது. எளியோர் அப்பொருளினைப் பெற்று மகிழ்ந்தனர்.

ஔவையார் தெய்வீகனையும் அவனுடைய நாட்டையும்,

'பொன்மாரி பெய்யுமூர் பூம்பருத்தி ஆடையாம்
அந்நாள் வயலரிசி ஆகுமூர்—எந்நாளும்
தேங்குபுக ழேபடைத்த சேதிமா நாடதனில்
ஓங்குதிருக் கோவ லூர்'

'குன்றுபோல் வீறு குணமுடையார் தம்முடன்நீ
இன்றுபோல் என்றும் இரு'

என்னும் பாக்களால் வாழ்த்தினார். தெய்வீகன் ஔவையார்பால் அளவற்ற அன்புடையவனாய் இன்பக் கண்ணீர் சொரிந்தான். பாரிமகளிர் ஔவையாரது கைம்மாறு வேண்டாப் பேருதவியைக்கண்டு அழலிடைபட்ட வெண்ணெயென உருகினர். மக்கட்கூட்டம் ஔவையாரைத் தொழுது வாழ்த்திச் சென்றது. அரசர்களும் ஔவையார்பால் பிரியாவிடைபெற்றுப் பிரிந்தனர். ஔவையார் சிலகாலம் திருக்கோவலூரில் இருந்து பாரிமகளிரின்வாழ்க்கையைப் பார்த்து மகிழ்ந்து சென்றார்.

## கச. வரகுணவின் வளம்

ஔவையார் திருக்கோவலூரில் நின்றும் புறப்பட்டுப் புல்வேளூர் என்னும் ஊரையடைந்தார்; பசி நோய் அதிகரித்தது. அங்கிருந்த பூதன் என்பவனிடம்

சென்றார். அவன் ஔவையார் பசியை வரகுச்சோறும மோரும் கொடுத்துத் தீர்த்தான்; அப்பூதன்பால் ஔவையாருக்கு அருட்பெருக்குண்டாயிற்று. உடனே,

“ வரகரிசிச் சோறும் வழுதுணங்காய் வாட்டும்
முரமுரவென் றேபுளித்த மோரும்—பரிவுடனே
புல்வேளூர்ப் பூதன் புகழ்புரிந் திட்டசோ
றெல்லா உலகும் பெறும்”

என்னும் செய்யுளால் அவன் உணவைப் புகழ்ந்துரைத்தார். மேலும் அவனுடைய வயலுக்குக் கிணற்றுநீர் தானே ஏறிப் பாயும்படியாகவும் செய்தார். அதனைக் கண்ட பூதன் இறும்பூதடைந்து ஔவையாரை வாழ்த்தி வணங்கினான்.

## ௧௫. சேரன் அளித்த பொன் ஆடு

ஒருகால் ஔவையாருக்கு ஆடொன்று வேண்டியதாகவிருந்தது. வாதவன், வத்தவன், யாதவன் என்னும் செல்வர் மூவரிடத்திலும் சென்று கேட்டார். அவருள் வாதவன் ‘பிறகு தருகிறேன்’ என்றான். வத்தவன் ‘நாளைக்குத் தருகிறேன்’ என்றான். யாதவன் என்பவனோ ‘என்னிடம் இல்லை; தரமுடியாது’ என்று கூறினான். அவன் கூறியதைக் கேட்ட ஔவையார், ‘பிறகு தருகிறேன்’, ‘நாளைக்குத் தருகிறேன்’ என்று கூறி அலையச்செய்யாமல் சொன்ன யாதவர்கோன் சொல்லைப் புகழ்ந்து,

“ வாதவர்கோன் பின்னையென்றான் வத்தவர்கோன் நாளையென்றான்
யாதவர்கோன் யாதொன்றும் இல்லையென்றான்—ஆதலால்
வாதவர்கோன் பின்னையினும் வத்தவர்கோன் நாளையினும்
யாதவர்கோன் சொல்லே யினிது”

என்று பாடினார். பிறகு சேரனிடம் சென்று கேட்டார். அவனோ அறிஞரின் அருமை அறிந்த

அரசன். அவன் ஔவையாருக்கு ஊனுடல் உள்ள உயிராட்டைக் கொடுக்கலாகாதென்று நினைத்துப், பொன்னால் ஓர் ஆட்டினைச் செய்யுமாறு செய்து அதனை ஔவையாருக் களித்தான். அதனைக் கண்ட ஔவையார், சேரனைப் பார்த்துச் 'சேரா! உன்னாடு பொன்னாடு' என்றனர். அச்சொல், உன் ஆடு பொன் ஆடு என்று பொருள்பட்டதல்லாமல், உன் நாடு பொன் நாடு என்றும் பொருள் பட்டதை யறிந்த சேரன் மிகுந்த மகிழ்ச்சியடைந்தான். ஔவையார் மீண்டும்,

"சிரப்பால் மணிமௌலிச் சேரமான் தன்னைச்
சுரப்பாடு கேட்கவே பொன்னாடொன் றீந்தான்
இரப்பவர் என்பெறினுங் கொள்வர் கொடுப்பவர்
தாமறிவர் தங்கொடையின் சீர்"

என்றும் புகழ்ந்து பாடினார்.

## கக. அசதிக் கோவையின் அருமை

ஒருபோது ஔவையார் பாண்டிய நாட்டின் கண்ணுள்ள காடொன்றின் வழியே சென்றுகொண்டிருந்தார், அப்போது பசி நோய் மிகுதியாக உண்டாகி விட்டது. அருகில் ஊர்களும் இல்லை. பசிநோயோ பொறுக்கமுடியாத அளவுக்கு வந்துவிட்டது. நான்கு பக்கங்களிலும் பார்த்தார். ஓரிடத்தில் ஓரிடையன் ஆடு மேய்த்துக்கொண்டிருந்தான். ஔவையார் அவனை அண்மி மிகுந்த பசியாக இருக்கிறதென்றும், அவனிடம் பசிக்கு யாதேனும் இருக்கின்றதா என்றும் கேட்டார். அவ்விடையன் கல்வியறிவற்ற முழுமகனாயினும் அருள் தங்கிய உள்ளமுடையவன். நல்ல வேளையாக அப்போது அவனிடம் பகலுணவுக்குக் கொண்டுசென்றிருந்த கூழ் இருந்தது. அதனை அவன்

ஔவையாருக் களித்துச் சாப்பிடச் செய்தான். ஔவையாருடைய பசி பறந்தது. உள்ளங் குளிர்ந்தது. வழக்கப்படி அருள் பெருகலாயிற்று. அவனைப் புகழ்ந்து பாடவேண்டும் என்னும் எண்ணத்துடன், 'அவன் பெயர் யாது?' என்று கேட்டார். அவனோ தன் பெயரை மறந்துவிட்டதாகக் கூறினான். அவன் அறியாமைக்கிரங்கிய ஔவையார் 'போனாற் போகட்டும்; உன்னுடைய ஊர்ப் பெயர் யாது?' என்று கேட்டார். அக்கோனோ அதனையும் மறந்து விட்டதாகவுரைத்தான். 'உன் ஊரில் உள்ள ஏதேனுமோர் அறிகுறியையேனும் சொல்' என்றார். 'ஐந்து வேலமரங்கள் இருக்கின்றன' என்றான். அவனது மறதியை எண்ணி வியந்த ஔவையார் அவனுக்கு அசதி என்றும் (அசதி—மறதி) அவனுடைய ஊருக்கு ஐவேல் என்றும் பெயர் கொடுத்து அவன்மீது ஒரு கோவை பாடியருளினார்.

"ஆய்ப்பாடி யாயர்தம் ஐவே லசதி அணிவரைமேல்
கோப்பாம் இவளெழிற் கொங்கைக்குத் தோற்றிபக் கோடிரண்டும்
சீப்பாய்ப் பரணிய தாய்ச்சிமி ழாய்ச்சின்ன மோதிரமாய்க்
காப்பாய்க் கரவளை யாய்ப்பல்லக் காகிக் கழிந்ததுவே"

"அலைகொண்ட வேற்கரத் தைவே லசதி அணிவரைமேல்
நிலைகொண்ட மங்கைதன் கொங்கைக்குத் தோற்றிள நீரினங்கள்
குலையுண் டடியுண் டுடன்கையி லெற்றுண்டு குட்டுமுண்டு
விலையுண் டடியுண்டு கண்ணீர் ததும்பவும் வெட்டுண்டதே."

"அற்றாரைத் தாங்கிய ஐவே லசதி அணிவரைமேல்
முற்றா விளமுலை யெவ்வாறு சென்றனள் முத்தமிழ்நூல்
கற்றார் பிரிவுங்கல் லாதா ரிணக்கமுங் கைப்பொருளொன்(று)
அற்றார் இளமையும் போலே கொதிக்கும் அருஞ்சுரமே"

என்பன அக்கோவையின் சில செய்யுட்கள். மற்றைச் செய்யுள்களெல்லாம் மறைந்துவிட்டமையின், நாம்

அக்கோவையினை இக்காலத்தில் பார்த்து மகிழ முடியாமற்போய்விட்டது. ஔவையார் திருமொழியால் புகழப்பெற்ற அவ்ஆயன் அறிவு விளங்கப் பெற்றான். ஔவையாரால் கோவை பாடப்பெற்ற அவனுடைய புகழ் யாண்டும் பரவியது. அன்னான் சின்னாளிலே பெருந்திருவடைந்து பின்னாளில் பீடுபெற்று விளங்கினான்.

## கஎ. கருத்தொவ்வாக் காட்சி

ஒருநாள் ஔவையார் மிகுந்த பசியால் வருந்தி ஒருவனுடைய வீட்டிற்குச் சென்றார். வீட்டுக்காரனோ மிகுந்த பிசினன். எச்சிற்கையாற் காக்கையைக்கூட விரட்டமாட்டான். அவன் ஔவையாரைக் கண்டதும் ‘இங்கொன்றும் இல்லை போ’ என்று விரட்டினான். அவன் மனைவியோ விருந்தினரைப் போற்றிப் பேணுதலில் திருந்திய பண்பினள். அவள் தன் கணவன் அறியாவண்ணம் ஔவையாரை அழைத்து உணவு முதலியன அளித்து மிகவும் போற்றினாள். அருங்குணச் செல்வியாகிய அம் மாதுக்குப் பிசினனைக் கணவனைகப் படைத்த நான்முகன்மீது ஔவையாருக்குச் சினமுண்டாயிற்று. அவர் உடனே,

> “ அற்றதலை போக அறாததலை நான்கினையும்
> பற்றித் திருகிப் பறியேனோ—வற்றல்
> மரமனை யானுக்கிம் மானை வகுத்த
> பிரமனையான் காணப் பெறின் ”

என்று நான்முகனைப் பழித்துப் பாவொன்று பாடினார். மற்றொரு நாள் ஔவையார் பசியால் வருந்தி இவ்வாறே வேறொருவனுடைய இல்லத்திற்குச் சென்றார். அந்த

இல்லத்தினுடைய நிலைமை முன் சென்ற வீட்டின் நிலைமைக்கு நேர் மாருக விருந்தது. வீட்டுக்காரன் மிகவும் நல்லவன். அவன் மனைவியோ மிகவும் பொல்லாதவள். மனிதவடிவமும் பேய்க்குணமும் பெற்றவள். ஒளவையார் பசியோடு வந்திருப்பதைக் கண்ட வீட்டுக்காரன் ஒளவையாரை உள்ளே யழைத்துக்கொண்டு போகாமல் தெருத்திண்ணையில் உட்காரவைத்துவிட்டுத், தான் மாத்திரம் தன் மனையாளிடத்திற்குச் சென்று அவளுக்கு மனநிறைவு உண்டாகும்படியாக இனிய மொழிகள் பேசி, முகத்தைத் துடைத்துவிட்டு, அவளுடைய தலையிலே ஈருருவிப் பேன் பார்த்து மிகவும் அஞ்சிய உள்ளத்துடன், 'ஒரு கிழவி சிறிது உணவுக்காக வந்து நம் வீட்டுத் திண்ணையிலே அமர்ந்திருக்கிருள்' என்று கூறினன்.

உடனே அந்தப் பொல்லாத பேய்ப் பெண்ணனவள் பாம்புபோற் சீறி, "நீ கெட்ட கேட்டிற்கு விருந்துதான் குறைச்சலாக விருக்கிறதோ? உன் இழவுக்கு அழுவது போதாதென்று ஊரார் இழவுக்குஞ் சேர்த்து என்னை அழச்சொல்லுகிருயோ" என்று ஆரவாரஞ் செய்து, கழுநீர்ப்பானையில் இருந்த தண்ணீரையெடுத்து அவனுடைய தலையிலே ஊற்றி நீராட்டி, விளக்குமாற்ருல் வெண்சாமரை வீசி, முறத்தால் ஆலவட்டம் பரிமாறி, வீட்டுக்குந் தெருவிற்குமாக அவனைத் துரத்தித் துரத்தி அடித்தாள். இவற்றையெல்லாந் திண்ணையிலிருந்து பார்த்துக்கொண்டிருந்த ஒளவையார்,

"இருந்து முகந்திருத்தி ஈரொடுபேன் வாங்கி
விருந்து வந்ததென்று விளம்ப—வருந்திமிக
ஆடினள் பாடினள் ஆடிப் பழமுறத்தால்
சாடினள் ஓடோடத் தான்"

என்றொரு செய்யுளைப் பாடினார். இதனைக் கேட்ட வீட்டுக்காரன் வந்திருப்பவர் ஒளவையார் என்றறிந்து, பின்னும் தன் மனைவியைப் பலவாறு வேண்டினான். அவளும் சிறிது மனமிரங்கி ஒளவையாரை யழைத்துச் சோறிட்டாள். அவள் இட்ட உணவு ஒளவையாருக்கு மனநிறைவை உண்டுபண்ணவில்லை. அவர் அவ் வுணவினைப் பார்த்தார். மிகுந்த வெறுப்பே ஏற்பட்டது. உடனே,

"காணக்கண் கூசுதே கையெடுக்க நாணுதே
மாணுக்க வாய்திறக்க மாட்டாதே—வீணுக்கென்
என்பெல்லாம் பற்றி எரிகின்ற தையையோ
அன்பில்லாள் இட்ட அமுது"

என்றொரு செய்யுளைப் பாடிவிட்டுப், பின்னர் அவ் வீட்டுக்காரனைப் பார்த்து, அவன் இல்வாழ்க்கையை இகழ்ந்து பேசினார். அவ்வீட்டுக்காரன் அம்மையாரைப் பணிந்து போற்றி 'என் ஊழ்வினை இவ்வாறு இருக்கின்றது; இதற்கு யான் என்செய்வது?' என்று கேட்டான். அதற்கு ஒளவையார்,

"சண்டாளி சூர்ப்பநகை தாடகையைப் போல்வடிவு
கொண்டாளைப் பெண்டென்று கொண்டாயே—தொண்டர்
செருப்படிதான் செல்லாவுன் செல்வமென்ன செல்வம்
நெருப்பிலே வீழ்ந்திடுதல் நேர்,

"பத்தாவுக் கேற்ற பதிவிரதை யுண்டானால்
எத்தாலும் கூடியிருக்கலாம்—சற்றேனும்
ஏறுமா றாக இருப்பளே யாமாயிற்
கூறாமற் சந்நியாசம் கொள்,

"ஏசிஇடலில் இடாமையே நன்றெதிரிற்
பேசு மனையாளிற் பேய்நன்று—நேசமிலா
வங்கணத்தில் நன்று வலியபகை வாழ்வில்லாச்
சங்கடத்திற் சாதலே நன்று"

என்று வெண்பாக்களாலே விடையளித்துச் சென்றார். அவ்வில்லத்தானும் உடனே துறவு பூண்டு நன்னிலையடைந்து, தொல்லைகளினின்றும் விடுபட்டான்.

ஒருசமயம் சில புல்லறிவாளர்கள் ஔவையாரையடைந்து, தங்களைப் புகழ்ந்து பாடவேண்டுமென்று வேண்டிக்கொண்டார்கள். ஔவையார் கூழின் பொருட்டும் புகழ்ந்து பாடுவராதலால், தம்மையும் எளிதில் புகழ்ந்து பாடியருளுவார் என்று எண்ணிக் கொண்டார்கள். ஆனால், ஔவையார்போன்ற மாண்பு மிக்க பெரியோரின் வாக்கால் புகழ்ந்து பாடப்பெறத் தக்க நற்பண்புகள் சிறிதும் அவர்களிடம் இல்லை. ஔவையாரோ பாட மறுத்தார். அவ்வறிவிலிகளோ ஔவையாரை மிகவும் வற்புறுத்தினர். ஔவையார் அவர்களுடைய அறிவின்மைக்குப் பெரிதும் இரங்கி,

"மூவர்* கோவையும் மூவிளங் கோவையும்
பாடிய என்றன் பனுவல் வாயால்
எம்மையும் பாடுக என்றனிர் ; நும்மையிங்கு
எங்ஙனம் பாடுகென் யானே வெங்கண்
களிறுபடு செங்களங் கண்ணிற் காணீர்
வெளிறுபடு நல்யாழ் விரும்பிக் கேளீர்
புலவர் வாய்ச்சொற் புலம்பலுக் கிரங்கீர்
இலவ வாய்ச்சியர்...............
அவிச்சுவை யல்லது தமிழ்ச்சுவை தேரீர்
உடீஇர் உண்ணீர் கொடீஇர் கொள்ளீர்
ஒவ்வாக் கானத் துயர்மரம் பழுத்த
துவ்வாக் கனியெனத் தோன்றிய நீரே"

என்று இகழ்ந்து பாடினார். குளிக்கச் சென்று சேறு பூசிக்கொண்டாற்போன்ற இச்செய்கைக்கு அவர்கள் நாணிச் சென்றனர்.

---

* மும்மூர்த்திகளுக்கு இறைவனையும்; சேர சோழ பாண்டியரையும்.

## கஅ. பட்ட பலாத் தழைக்கப் பாடல்

ஓர் ஊரில் ஒரு குறவனுக்கு இரண்டு மனைவியர் இருந்தனர். அவர்களுள் குறவன் இளையாள்மேல் மிகுந்த காதலுடையவனாக விருந்தான். அவன் ஒரு பலாமரத்தை அன்புடன் வளர்த்துவந்தான். ஒருநாள் அக்குறவன் வேற்றூருக்குச் செல்லும்போது தான் அன்புடன் வளர்த்துவந்த பலாமரத்தைப் பார்த்துக் கொள்ளுமாறு மனைவியரிருவரிடமுங் கூறிவிட்டுச் சென்றான். அவன் சென்றபின் இளையவள் அம்மரத்தை வெட்டிவிட்டு, மூத்தவள்பேரில் பழிசுமத்தினாள். மூத்தவள், இளையாள்மேல் காதலுள்ள தன் கணவன் தன்னை யாது செய்வானோ என்று அஞ்சியிருந்தாள். அப்போது தற்செயலாக அங்கு வந்த ஔவையார் மூத்தவனை அஞ்சவேண்டாவென்று கூறிவிட்டு,

"கூரிய வாளாற் குறைத்திட்ட கூன்பலா
ஓரிதழாய்க் கன்றாய் உயர்மரமாய்ச்—சீரியதோர்
வண்டுபோற்கொட்டையாய் வண்காயாய்த் தின்பழமாய்ப்
பண்டுபோல் நிற்கப் பணி"

என்றொரு செய்யுள் கூறினார். உடனே வெட்டுண்ட மரம் தளிர்த்துக் காய்த்துக் கனிந்து நின்றது. அதனால் மகிழ்வடைந்த மூத்தவள் ஒருழக்குத் தினையரிசியை ஒரு பழந்துணியில் முடிந்து கொடுத்தாள். அக்குறமாது அன்புடன் தந்த தினையரிசியை வாங்கிக்கொண்டு உறையூரை நோக்கி வந்தார். பொழுதுசென்று இராக்காலமாயிற்று. விரைவாக நடந்து வந்தமையால் களைப்படைந்து சோழமன்னனுடைய அரண்மனைவாயிலில் உட்கார்ந்திருந்தார்.

## ௧௯. சோழன்பால் உரையாடல்

அப்போது அவ்வழியே வந்த சோழன் ஒளவையாரைக் கண்டு வியப்படைந்தான். "இந்நேரத்தில் எங்கிருந்து வருகிறீர்?" என்று வினவினான். அதற்கு ஒளவையார்,

"கானொந்தேன் நொந்தேன் கடுகி வழிநடந்தேன்
யான்வந்த தூரம் எளிதன்று—கூனன்
கருந்தேனுக் கண்ணாந்த காவிரிசூழ் நாடா
இருந்தேனுக் கெங்கே இடம்"

என்று விடையளித்தார். பிறகு சோழன் ஒளவையார் கையிலுள்ள 'மூட்டை யாது?' என்று கேட்டான். அதற்கு அவர்,

"கூழைப் பலாத்தழைக்கப் பாடக் குறமகளும்
ஊழைக் குழக்குத் தினைதந்தாள்—சோழகேள்
உப்புக்கும் பாடிப் புளிக்கு மொருகவிதை
ஒப்பிக்கும் என்றன் உளம்"

என்று விடை பகர்ந்தார்.

## ௨௦. புலவர் புன்கண் போக்கல்

ஒரு நாள் சோழன் தன் அவைக்களப் புலவர்களை நோக்கி "நீங்கள் நாளைக் காலைக்குள் நாலுகோடி செய்யுள்களைப் பாடிவருதல் வேண்டும்" என்று கட்டளை பிறப்பித்தான். சோழனுடைய கட்டளை அவைக்களப் புலவர்களுக்கு நன்கு விளங்கவில்லை. அவர்கள் அனைவரும் ஓரிடத்தே கூடி எண்ணமிட்டனர். "எல்லோரும் சேர்ந்து விரைவாகப் பாடினும் நாளைக் காலைக்குள் நான்குகோடிப் பாடல்களைப் பாட முடியாதே. இதற்கு என் செய்வது? நம்முடைய பிழைப்புக்கு எதிர்பாராத விதமாக இவ்வாறு இக்கட்டு வந்ததே!" என்று வாடிய

முகத்துடன் கவலைப்பட்டுக்கொண்டிருந்தனர். அப்போது தற்செயலாக அவ்வழியே வந்த ஔவையார் அவ்வறிஞர்களைக் கண்டு, "உங்களுக்கு நேர்ந்த தொல்லை யாது? ஏன் வருந்திக்கொண்டிருக்கின்றீர்கள்" என்று வினவினார். அவர்களும் நிகழ்ந்ததைக் கூறினார்கள். அவர்கள் கூறியதைக்கேட்ட ஔவையார் நகைத்து "இதற்குத்தானா கவலைப்பட்டீர்கள்? நான் பாடுகிறேன் எழுதிக்கொள்ளுங்கள்" என்று கூறிவிட்டு, நின்றபடியே,

1. "மதியாதார் முற்றம் மதித்தொருகாற் சென்று
மிதியாமை கோடி பெறும்,

2. "உண்ணீருண் ணீரென்று ஊட்டாதார் தம்மனையில்
உண்ணாமை கோடி பெறும்,

3. "கோடி கொடுத்துங் குடிப்பிறந்தார் தம்மோடு
கூடுவது கோடி பெறும்,

4. "கோடானு கோடி கொடுப்பினுந் தன்னுடைநாக்
கோடாமை கோடி பெறும்"

என்னும் நான்கு குறள்வெண்பாக்களையும் பாடினார். புலவர்கள் எழுதிக்கொண்டனர். ஆயினும், அவர்கட்குத் தம்முள்ளத்தில் நிறைவு உண்டாகவில்லை. 'இஃதென்னவோ வேடிக்கையாக இருக்கிறது; இதனை அரசன் ஒப்புக்கொள்ளுவானோ மாட்டானோ' என்று ஐயமுற்றனர். மறுநாள் அரசனது அவைக்குச் சென்றதும் இப்பாடல்களைக் கூறினர். அரசன் "இஃது இவர்களால் ஆனதில்லை. இவ்வேலையைச் செய்தது ஔவையாராகத்தான் இருக்கவேண்டும். அவர் இவ்வூருக்கு வந்துள்ளார் போலும்" என்று துணிந்து நன்கு விசாரித்து உண்மையறிந்து ஔவையாரை யழைத்துப் போற்றினன்.

## உக. வறியார்க்கு வாரி வழங்கல்

ஒருகால் பாண்டியன் தனது நகரின்கண்ணுள்ள அறிஞர் அனைவருடைய ஆற்றலையும் ஆராய எண்ணினன். உயர்ந்த செம்பொன்னாற் செய்த நான்கு பருத்த சங்கிலிகளில் தொங்குகின்ற ஊஞ்சற் பலகையை அமைத்து, அதன்மீது பொன்னைக் குவியலாகக்கொட்டி, இவ்வூஞ்சற் பலகையின் நான்கு சங்கிலிகளும் அறுந்து விழும்படி செய்யுள் செய்யத்தக்க ஆற்றல் படைத்தார் எவரேனும் உளராயின், அவருக்குத் தகுந்த சிறப்புடன் இப்பொற்குவியல் பரிசளிக்கப்படும் என்று எங்கும் பறையறைவித்தான். இச்செய்தியை அறிந்த அறிஞர் பலர் அங்கடைந்து செய்யுள் பாடிப் பார்த்தனர்; ஒன்றும் நடைபெறவில்லை. அவர்கள் தலைகவிழ்ந்து நாணி அப்பால் சென்றனர். அப்போது ஔவையார் அவ்வழியாக வந்தனர். நிகழ்ந்துள்ள செய்தியைச் சிலர் அவருக்குத் தெரியப்படுத்தினர். உடனே ஔவையார் அங்குச் சென்றார்.

"ஆர்த்தசபை நூற்றொருவர் ஆயிரத்தொன் றாம்புலவா
வார்த்தை பதினா யிரத்தொருவர்—பூத்தமலர்த்
தண்டா மரைத்திருவே தாதாகோ டிக்கொருவர்
உண்டாயின் உண்டென் றறு.

"தண்டாம[1] லீவது தாளாண்மை தண்டி
அடுத்தக்கால் ஈவது வண்மை—அடுத்தடுத்துப்
பின்சென்றா லீவது காற்கூலி பின்சென்றும்
ஈயானெச் சம்போ[2] லறு.

"உள்ள வழக்கிருக்க ஊரார் பொதுவிருக்கத்
தள்ளி வழக்கதனைத் தான்பேசி—எள்ளளவும்
கைக்கூலி தான்வாங்குங் காலறுவான் தன்கிளையும்
எச்சமறும் என்றால் அற.

---

1. தண்டாமல்-கேட்காமல். 2. எச்சம்-பிள்ளைகள்.

"வழக்குடையான் நிற்ப வலியானைக் கூடி
வழக்கை யழிவழக்குச் செய்தோன்—வழக்கிழந்தோன்
சுற்றமுந் தானும் தொடர்ந்தழுத கண்ணீரால்
எச்சமறும் என்றால் அறு"

என்னும் நான்கு வெண்பாக்களையும் பாடினர். ஒவ்வொரு பாடலுக்கும் ஒவ்வொரு சங்கிலியாக அறுந்து விழுந்தன. ஔவையார் அஃதிலிருந்த பொற்குவியலை வாரி வறிஞர்களுக்கு வழங்கினர். இச்செய்தியைப் பாண்டியன் அறிந்து ஔவையாரை அழைத்துப் போற்றி மகிழ்ந்தான்.

## ௨௨. நன்றியில் செல்வர்க்கு நாணல்

ஒருகால் ஔவையார் ஒரு செல்வனைக் கண்டார். அவன் கீழ்மகனென்று அவர் அறியார். ஆகவே, அவனுடைய செல்வச்சிறப்பையும் பிற பெருமைகளையும் புகழ்ந்து பாடினர். அவன் தன்னிடம் யாதும் இல்லையென்று கையை விரித்துவிட்டான். அவனது ஈயாத் தன்மையைக் கண்ட ஔவையார் குற்றம் தமதே என்று எண்ணினர்.

"கல்லாத ஒருவனையான் கற்றா யென்றேன்
காடுறையும் ஒருவனைநா டாள்வா னென்றேன்
பொல்லாத ஒருவனைநான் நல்லான் என்றேன்
போர்முகத்தை யறியானைப் புலியே றென்றேன்
மல்லாரும் புயமென்றேன் சூம்பற் றோளை
வழங்காத கையனைநான் வள்ள லென்றேன்
இல்லாது சொன்னேனுக் கில்லை யென்றான்
யானும்என் கருமத்தால் ஏகின் றேனே"

என்று கூறி இழித்துப் பாடிவிட்டுச் சென்றார்.

## உரு. செந்தமிழ் கேட்கும் திருமுருகன்

நல்ல கோடைகாலத்தில் நடுப்பகலில் ஔவையார் ஒரு காட்டு வழியே சென்றார். அவர் சென்ற வழியில் நாவல் மரமொன்று நன்கு பழுத்து நின்றது. ஔவை யார் அம்மரத்தின் நிழலிற் சென்று நின்றார். மரத்தின் மீது மாடுமேய்க்கும் சிறுவன்போல் ஒரு பையன் நாவற் பழங்களைப் பறித்துத் தின்றுகொண்டிருந்தான். ஔவையார் அப்பையனைப் பார்த்துப், 'பையா! எனக் குஞ் சிறிது பழங்கள் போடு' என்றார். உடனே அப் பையன், 'பாட்டி! உனக்குச் சுடுகிற பழங்கள் வேண் டுமா? சுடாத பழங்கள் வேண்டுமா?' என்றான். உடனே ஔவையார் அப்பையனைக் குறும்பன் என்று எண்ணி, "ஓ மூடா, நாவற்பழங்கள் எங்கேனும் சுடுமா? குறும்பா பேசுகிறாய்? எங்கே சுடுகிற பழங்களைப் போடு பார்ப்போம்" என்றார். உடனே அப்பையன் மரக்கிளை யைப் பிடித்து உலுக்கினான். பழங்கள் மணலின்மீது உதிர்ந்தன. ஔவையார் அவைகளில் சிலவற்றைக் கையிலெடுத்தார். அவற்றில் மண் ஒட்டிக்கொண்டிருந் தது. அம்மண் போகுமாறு வாயால் ஊதினார். அதனைக் கண்ட பையன், 'எங்கேனும் நாவற்பழம் சுடுமா என்று கேட்டாயே, பாட்டி. இப்போது ஏன் வாயால் ஊதுகிறாய்?' என்று கேட்டு நகைத்தான். சுடுகிற பழம் சுடாதபழம் என்று பையன் சொல்லி யுதன் கருத்து அப்போதுதான் ஔவையாருக்கு விளங் கிற்று. நாம் இந்தச் சிறுவனுக்குத் தோற்றோமல்லவா என்று எண்ணியவராய்,

"கருங்காலிக் கட்டைக்கு நாணாக்கோ டாரி
இருங்கதலித் தண்டுக்கு நாணும்—பெருங்கானில்

காரெருமை மேய்க்கின்ற காளைக்கே நான்தோற்றேன்
ஈரிரவுந் துஞ்சாதென் கண்''

என்று பாடினர். ஔவையார்முன் உடனே அப் பையன் முருகவேளாக மாறிநின்ருன். ஔவையாரைப் பெரிதும் மகிழ்ச்சியுடன் பார்த்துச் ''செந்தமிழ்ப் பெரு மாட்டி! நான்தான் உன்னுடன் சிறுவிளையாடல் புரிய விரும்பி இவ்வாறு போந்தேன்; வருந்தாதே. இவ் வுலகத்தின்கண் கொடியது யாது; இனியது யாது; பெரியது யாது; அரியது யாது? என்பதனை எனக்கு விளக்கிக் கூறுவாயாக'' என்று கூறினன். உடனே, அறுமுகன் கேட்ட நான்கு வினக்கட்கும் ஔவையார் நான்கு அகவற் பாக்களால் விடையளித்தார். ஔவை யார் விடையைக் கேட்டு மகிழ்ந்த அறுமுகன் அவரை வாழ்த்தி மறைந்தருளினன்.

கொடியது கேட்கின் நெடியவெவ் வேலோய்!
கொடிது கொடிது வறுமை கொடிது;
அதனினுங் கொடிது இளமையில் வறுமை;
அதனினுங் கொடிது ஆற்ருெணுக் கொடுநோய்;
அதனினுங் கொடிது அன்பிலாப் பெண்டிர்;
அதனினுங் கொடிது
இன்புற அவர்கையில் உண்பது தானே.
இனியது கேட்கின் தனிநெடு வேலோய்!
இனிது இனிது ஏகாந்த மினிது;
அதனினும் இனிது ஆதியைத் தொழுதல்;
அதனினும் இனிது அறிவினர்ச் சேர்தல்;
அதனினும் இனிது அறிவுள் ளோரைக்
கனவிலும் நனவிலும் காண்பது தானே.
பெரியது கேட்கின் எரிதவழ் வேலோய்!
பெரிது பெரிது புவனம் பெரிது;
புவனமோ—நான்முகன் படைப்பு;
நான்முகன் கரியமால் உந்தியில் வந்தோன்;
கரிய மாலோ அலைகடற் றுயின்ருேன்;

அலைகடல் குறுமுனி அங்கையி லடக்கம்:
குறுமுனி யோகல சத்திற் பிறந்தோன்;
கலசமோ—புவியிற் சிறுமண்;
புவியோ அரவினுக் கொருதலைப் பாரம்;
அரவோ உமையவள் சிறுவிரல் மோதிரம்;
உமையோ இறைவர் பாகத் தொடுக்கம்;
இறைவரோ தொண்டர் உள்ளத் தொடுக்கம்:
தொண்டர்தம் பெருமை சொல்லவும் பெரிதே.
அரியது கேட்கின் வரிவடி வேலோய்!
அரிதரிது மானிட ராத லரிது;
மானிட ராயினுங் கூன்குருடு செவிடு
பேடு நீங்கிப் பிறத்த லரிது
பேடு நீங்கிப் பிறந்த காலையும்
ஞானமுங் கல்வியும் நயத்த லரிது
ஞானமுங் கல்வியும் நயந்த காலையும்
தானமும் தவமுந் தாஞ்செய லரிது
தானமும் தவமுந் தாஞ்செய்வ ராயின்
வானவர் நாடு வழிதிறந் திடுமே.

## உச. வாழ்த்தின் வனப்பு

சோழன் குலோத்துங்கனுக்குத் திருமணம் நிகழ்ந்தது. பல அறிஞர்கள் அப்போது வாழ்த்துப் பாமாலைகள் பாடினர். ஔவையாரும் அங்கே சென்றிருந்தார். அவர் 'வரப்புயர' என்றதுடன் தமது வாழ்த்துப்பாவை முடித்துவிட்டார். இதன் பொருளையறியாத அரசனும் பிறரும் ஒட்டக்கூத்தர் முகத்தைப் பார்த்தார்கள். அதற்கு ஒட்டக்கூத்தர்,

"வரப்புயர நீருயரும்; நீருயர நெல்லுயரும்
நெல்லுயரக் குடியுயரும், குடியுயரக் கோலுயரும்
கோலுயரக் கோன் உயரும்"

என்று பொருள் விரித்துரைத்தார். அரசனும் பிறரும் ஔவையாரது சுருங்கச்சொல்லலைப் பெரிதும் பாராட்டி மகிழ்ந்தனர்.

## உரு. இடித்துரைக்கும் இயல்பு

ஒருக்கால் ஔவையார் சோழவரசனது அவைக் களத்தின்கண் சில செய்யுள்களைக் கூறிப் பொருள் விரித்துக்கொண்டிருந்தார். சோழன் ஔவையார் கூறு வதைக் கேளாமல் ஓர் அழகிய ஆடையைப் பார்த்துக் கொண்டு அதிலே சிந்தையைச் செலுத்தியிருந்தான். அரசனுடைய மனநிலை ஔவையாருக்குத் தெரிந்தது. அவர் சோழனைப் பார்த்து,

"நூற்றுப்பத் தாயிரம் பொன்பெறினும் நூற்சீலை
நாற்றிங்கள் நாளுக்குள் நைந்துவிடும்—மாற்றலரைப்
பொன்றப் பொருதடக்கைப் போர்வேல் அகளங்கா
என்றும் கிழியாதென் பாட்டு"

என்றொரு பாட்டைப் பாடினார். சோழன் தன்னுடைய தவற்றை யுணர்ந்து பிழை பொறுக்குமாறு ஔவை யாரை வேண்டிக்கொண்டான்.

## உசு. நற்றமிழால் பேய்க்கும் நல்நிலை நல்கல்

ஒருபோது ஔவையார் ஓர் ஊரிற் சென்று கொண்டிருந்தபோது பொழுது போய்விட்டது. இன்றிரவை இவ்வூரில் கழித்துச் செல்வோம் என்று எண்ணியவராய் அங்குள்ளவர்களைப் பார்த்து, 'இங்கு எங்கேனும் தங்குவதற்குத் தக்கவிடம் கிடைக்குமோ?' என்று கேட்டார். அப்போது அவர்கள் இவ்வூரில் ஒரு பொது இடம் இருக்கின்றது. ஆனால் அதில் ஒரு பேய் இருக்கிறது. அங்குச் சென்று தங்க எவரும் அஞ்சுகிறார்களென்று உரைத்தனர். அவர்கள் கூறிய தைக் கேட்ட ஔவையார் 'பேயைப் பேய் அடிக்காது' என்று அவர்களுக்குக் கூறிவிட்டு, அப் பொதுமடத் திற்குச் சென்று அங்கே படுத்து உறங்கினார். அப்

போது வெளியே சென்றிருந்த பேய், ஔவையார் படுத் திருப்பதைக் கண்டு அதிக ஆங்காரத்துடன் 'எற்று எற்று' என்று ஔவையாரை அறைதற்கு வந்தது. ஔவையார் உறக்கம் நீங்கி விழித்துப் பார்த்தார். பேயின் நிலைமையை உணர்ந்தார். அதனைப் பார்த்து,

"வெண்பா விருகாலிற் கல்லானை வெள்ளோலை
கண்பார்க்கக் கையால் எழுதானைப்—பெண்பாவி
பெற்றாளே பெற்றாள் பிறர்நகைக்க வேபெற்றாள்
எற்றோமற் றெற்றோமற் றெற்று"

என்று ஒரு வெண்பாவைப் பாடினார். அப் பேய் கல்வியறிவுடையதாகையால், கல்வியறிவில்லாத மூடனை விரும்பிய மடமையையுடைய நமது பழைய வரலாற்றை அறிந்து சொல்லுகிற இவர் கடவுட் டன்மையுடையவராக இருக்கவேண்டுமென்று அஞ்சி அவ்விடத்தைவிட்டு அகன்றது. மீண்டும் அப்பேய் தன்னுடைய பேய்க்குணம் போகாமல் இரண்டாஞ் சாமத்தில், 'எற்று எற்று' என்று வந்தது. அப்போது,

"கருங்குளவி சூரைத்தூ றீச்சங் கனிபோல்
வருந்தினர்க்கொன் றீயாதான் வாழ்க்கை—அரும்பகலே
இச்சித் திருந்தபொருள் சாயத்தார் கொள்வாரென்
றெற்றோமற் றெற்றோமற் றெற்று"

என்று பாடினார். அப்போதும் அப்பேய் அப் பாட் டைக் கேட்டுச் சென்றுவிட்டது. ஆயினும் மூன்றாஞ் சாமத்தில் மீண்டும் உள்ளம் திரிந்து 'எற்றெற்று' என்று வந்தது. அப்போது,

"வான முளதான் மழையுளதான் மண்ணுலகில்
தான முளதால் தயையுளதால்—ஆனபொழு
தெய்த்தோ மிளைத்தோமென் றேமாந் திருப்பாரை
எற்றோமற் றெற்றோமற் றெற்று"

என்று மீண்டும் ஒரு வெண்பாவைப் பாடினார்.

பேய் இப்பொழுதும் ஓடிப்போய்ப் பிறகு நான்காஞ் சாமத்தில் வந்தது. அப்போது,

"எண்ணா யிரத்தாண்டு நீரிற் கிடந்தாலும்
உண்ணீரம் பற்ருக் கிடையேபோற்—பெண்ணுவாய்
பொற்ருெடி மாதர் பொருதோள்மேற் சாராரை
எற்ருேமற் றெற்ருேமற் றெற்று"

என்னும் வெண்பாவைப் பாடினுர். இதனைக்கேட்ட பேய், ஔவையார் முன் அஞ்சி அடங்கி ஒடுங்கி நின்றது. அதன் நிலைமையைக்கண்ட ஔவையார் அதன் வரலாறு யாதென்று வினவினுர். அப்பேய் அம்மையாரைத் தொழுது தன் பழம்பிறப்பின் செய்தியை உரைக்கலாயிற்று.

"அன்னுய்! நான் அந்நாளில் இந்நகரத்தை ஆண்ட அரசன் மகள். நான் இளையளாயிருந்த காலத்தில் ஒரு நாள் அரண்மனையின் மேல்மாடியில் உலாவி நின்றேன் அப்போது தெருவில் ஓர் அரசிளங் குமாரன் கட்டழகிற் சிறந்தவனுய்க் காளைபோற் சென்றுகொண்டிருந்தான். அவனைக் கண்டு அடங்காக் காதல்கொண்ட நான் அவனுக்கொரு காதல் முடங்கல் தீட்டி, அவனுக்கு முன்னுல் எறிந்தேன். அம்முடங்கலில் நான் அன்றிரவு அவனை இந்தப் பொது மடத்தில் வந்து எதிர்ப்படுவதாக எழுதியிருந்தேன். ஆனுல் அவ்வரசிளங் குமரனே கல்வியறிவில்லாதவன். நாடோடியாய்த் திரிந்து கொண்டிருந்தவன். அவன் அம்முடங்கலைப் படித்தறிய முடியாமையின் வழியில் எதிர்ப்பட்ட ஒருவனிடம் காட்டினுன். அவனே ஒரு தொழுநோயாளன். அத்தீயோன் முடங்கற் செய்தியை உணர்ந்து என்னை ஏமாற்றி இன்பமனுபவிக்கும் எண்ணத்துடன் அச்சிறுவனுக்குப் பொய்யுரை யொன்றைப் புகன்று,

நீ மிகுவிரைவில் இவ்வூரைவிட்டு ஓடிப்போ. இன்றேல் அரசனால் கேடு நேரிடுமென்று மருட்டியோட்டிவிட்டு அத்தொழுநோயாளனே இந்தப் பொது மடத்தில் வந்து என்னை எதிர்பார்த்திருந்தான். காதலால் கண்மறைப்புண்ட யான் இம்மடத்திற்கு வந்தேன். இருளில் ஒன்றும் விளக்கமாகத் தெரியவில்லை. கபடனாகிய அத்தொழுநோயாளன் வந்து என்னைத் தழுவினான். பிறகுதான் எனக்கு உண்மை விளங்கிற்று. சீற்றங்கொண்ட யான் அவனையுங்கொன்று என்னுயிரையும் மாய்த்துக் கொண்டேன். அதன் பிறகு இவ்வாறு பேயாக அலைகின்றேன்.''

பேயின் வரலாற்றைக் கேட்ட ஔவையார் பெரிதும் வருந்தினார். அப்பேயைப் பார்த்து, 'உனக்கு யாது வேண்டும்?' என்று கேட்டார். 'நான் விரும்பிய கணவனை அடைந்து இன்புறவேண்டு' மென்றது அப்பேய். ஔவையார் அவ்வரசகுமாரன் எந்நிலையிலுள்ளானென்று உள்ளொளி தங்கிய அறிவுப் பார்வையால் பார்த்தார். அரசகுமாரி தன்னை விரும்பி ஏமாந்ததை அறிந்த அவன், தன் மடமையால் நேர்ந்ததென்று வருந்தி அவனும் தற்கொலை செய்துகொண்டு பேயாக அவ்விடத்தில் இருப்பதாகத் தெரியவந்தது. அச்செய்தியை ஔவையார் அப்பெண் பேய்க்கு உணர்த்தினார். அச்செய்தியை அறிந்த அப்பெண் பேய் மகிழ்ந்தது. இருவரும் அரச குடும்பத்தில் தோன்றி இனிது வாழுமாறு அருள் செய்துவிட்டு அவ்விடம் விட்டு அகன்றார்.

## உஎ. நின்றேடிப் பொய்க்கும் தீமை

கோரைக்கால் என்னும் ஓர் ஊருக்கு ஔவையார் சென்றார். அப்போது அங்கு ஆழ்வான் என்று ஒரு

செல்வன் இருந்தான். ஔவையார் அவனைச் சென்று பார்த்துப் புகழ்ந்து பாடினார். அவன் முதலில் ஔவை யாருக்கு ஒரு யானை தருவதாகக் கூறினான். மறுநாள் சென்றபோது ஒரு குதிரை தருவதாகக் கூறினான். அதற்கடுத்த நாள் சென்றபோது ஓரெருமை தருவதாகக் கூறினான். பிறகு சென்றபோது ஓர் எருது தருவதாகக் கூறினான். பின்னர் ஒரு சேலை தருவதாகக் கூறினான். ஆனால் எதையும் தரவில்லை. அவன் பேச்சு ஔவை யார்க்கு வியப்பை விளைவித்தது. அவர் உடனே,

"கரியாய்ப் பரியாகிக் காரெருமை தானாய்
எருதாய் முழுப்புடவை யாகித்—திரிதிரியாய்த்
தேரைக்கால் பெற்றுமிகத் தேய்ந்துகால் ஓய்ந்ததே
கோரைக்கால் ஆழ்வான் கொடை"

என்று அவன் கொடையை இகழ்ந்து பாடிச் சென்றார்.

## உ அ. உண்மை நவிற்சியின் ஒண்மை

பாண்டியன் ஒருவனுக்குத் திருமணம் நிகழ்ந்தது. அத்திருமணத்திற்குச் சென்றார் ஔவையார். திரு மணத்திற்குப் பிறகு விருந்து நடந்தது. சாப்பிடு வதற்குச் சென்றார். கூட்டம் மிகுதியாக இருந்தது. பந்தி நடைபெறும் இடத்திற்குச் செல்ல முயன்றார். கூட்டத்தில் அகப்பட்டு நெருக்குண்டதும் தள்ளுண்ட துமே மிச்சம். ஓரிடத்தில் உட்கார்ந்திருந்தார். சிலர் அம்மையாரைக் கண்டு 'சாப்பாடாகிவிட்டதா? விருந்து எப்படி?' என்று கேட்டனர். பசியோடிருந்த ஔவை யார்,

"வண்டமிழைத் தேர்ந்த வழுதி கலியாணத்(து)
உண்ட பெருக்கம் உரைக்கக்கேள்—அண்டி
நெருக்குண்டேன் தள்ளுண்டேன் நீள்பசியி னாலே
சுருக்குண்டேன் சோறுண்டி லேன்"

என்று நகைச்சுவை ததும்பப் பாவால் பதிலளித்தார்.

## உக. நிறைவுசெய் பாட்டால் நெடும் பொருள் நேர்தல்

அம்பர் என்னும் ஊரில் சிலம்பி என்று ஒரு கணிகைமாது இருந்தாள். அவள் கம்பர் வாக்கால் தானொரு பாடல்பெற வேண்டுமென்று விரும்பினாள். ஒருநாள் கம்பரைக் கண்டு தன் கருத்தைத் தெரியப் படுத்தினாள். கம்பர் தமக்கு ஆயிரம் பொன் கொடுத்தால்தான் ஒரு பாட்டுப் பாட முடியும் என்றார். சிலம்பி தனக்குள்ள பொருள்களையெல்லாம் விற்றுப் பொன்னாக்கினாள். ஐந்நூறு பொன்தான் தேறிற்று. அதனைக் கொண்டுபோய்க் கம்பரிடத்திற் கொடுத்து வணங்கி எப்படியேனும் தன்னுடைய விருப்பத்தை நிறைவேற்ற வேண்டுமென்று வேண்டிக்கொண்டாள். கம்பரோ சிறிதும் இரக்கங்கொள்ளாமல், ஐந்நூறு பொன்னுக்கு அரைப்பாட்டுத்தான் என்று கூறி,

> "தண்ணீருங் காவிரியே தார்வேந்தன் சோழனே
> மண்ணாவ துஞ்சோழ மண்டலமே"

என்று அவளுடைய வீட்டுச் சுவரிலே கரியினால் எழுதி விட்டுச் சென்றுவிட்டார். சிலம்பியோ கைப்பொருளை யும் இழந்து விருப்பமும் நிறைவேறாமல் வருந்திக் கொண்டிருந்தாள். இந்நிகழ்ச்சி நிகழ்ந்த சிறிது காலத்திற்குப்பின் ஔவையார் அந்த ஊருக்கு வந்தார். பசியால் வருந்தி அக்கணிகையின் வீட்டிற்குச் சென்றார். சிலம்பி ஔவையாருக்கு உணவளித்துப் போற்றினாள். உண்டபின் இளைப்பாறிக்கொண்டிருந்த ஔவையார் சுவரில் எழுதியிருப்பதைப் பார்த்துவிட்டு அதன் வரலாற்றை வினவினார். சிலம்பியும் நிகழ்ந்ததைக் கூறினாள். அதனைக்கேட்ட ஔவையார் 'அப்படியா செய்தி?' என்று கூறி, உடனே,

..............................."பெண்ணாவாள்
அம்பர்ச் சிலம்பி அரவிந்தத் தாள்அணியும்
செம்பொற் சிலம்பே சிலம்பு"

என்று பாட்டை நிறைவாக்கி முடித்தார். அக்கணிகைக்குப் பொருளும் பெருகத் தொடங்கியது.

### ௩௦. கம்பர்க்கு அறிவு காட்டல்

ஒருநாள் கம்பர் சிலம்பியின் வீட்டு வழியாகச் சென்றார். சுவரில் எழுதிவைத்த பாட்டைப் பார்த்தார். அது முழுப்பாட்டாக இருந்தது. பக்கத்திலிருந்தவர்களைக் கேட்டு நடந்ததை அறிந்துகொண்டார். 'கூழுக்குப்பாடிக் குடியைக்கெடுத்தாள்' என்று வருந்திக் கொண்டு சென்றார். அதுமுதல் கம்பருக்கு ஒளவையாரிடம் அழுக்காறு ஏற்பட்டது. ஒளவையாரை இழித்துரைப்பதற்குக் காலம் பார்த்துக்கொண்டேயிருந்தார். ஒருநாள் ஒளவையார் எதிர்ப்பட்டபோது, "ஒருகால் நாலிலைப் பந்தலடி' என்று இருபொருள் தருவதான ஒரு சொல்தொடரை ஒளவைய்யாரிடம் கூறிப் பொருள் கேட்டார். ஆரைக்கீரையைக் குறித்துக் கம்பர் கேட்டதில் 'அடி' என்னும் இழிசொல்லும் காணப்படுவதற்கு எதிர்விடையாக 'அடா' என்னும் சொல்லையும் சேர்த்து இருபொருள் தரும்படியாக,

" எட்டேகா லட்சணமே யெமனே றும்பரியே
மட்டில் பெரியம்மை வாகனமே—முட்டமேற்
கூரையில்லா வீடே குலராமன் தூதுவனே
ஆரையடா சொன்னா யது"

என்று கம்பரின் தருக்கடங்குமாறு விடையளித்தார். கம்பரோ நாணி நாவடங்கிச் சென்றார்.

ஒருகால் சோழன் அறிஞர்கட்கெல்லாம் ஒரு விருந்து வைத்தான். எல்லோரும் விருந்துண்டபின்

களித்திருந்தனர். கம்பரை நோக்கிச் சோழன் 'உலக இன்பங்களில் சிறந்தது எது?' என்று கேட்டான். அதற்குக் கம்பர்,

"கங்கைநீர் அதனின் மிக்க கடவுள்நீர் எங்கும் இல்லை
வெங்கதிர் ஒளியே யன்றி வேறொளிர் ஒளியு மில்லை
எங்கணும் தாயைப் போல இனியதோர் உறவு மில்லை
மங்கையர் சுகமே யன்றி மறுசுகம் இல்லை மன்னா!"

என்று விடையளித்தார். இதனைக்கேட்ட ஔவையார் 'பாட்டு முழுவதுங் குற்றமுடைய'தென்று கூறினார். சோழன் எவ்வாறென்று வினவினான். ஔவையார்,

"விண்ணினின் மழையே அல்லால் வேறொரு நதியும் இல்லை
கண்ணினின் ஒளியே யல்லால் காணுமோர் ஒளியு மில்லை
எண்ணிடிற் பொருளைப் போலே இனியதோர் உறவு மில்லை
உண்ணிடிற் சுவையே யல்லால் ஒருசுகம் இல்லை மன்னா!"

என்று கூறிச் சோழனை மகிழச்செய்தார். கம்பர் ஔவையாருக்கு எதிராக யாதும் பேச அஞ்சி மெல்ல நழுவிவிட்டார். கம்பர் சென்ற பிறகு சோழன் ஔவையார் வாய்மொழியைக் கிளறி மகிழ எண்ணியவனாய்க், 'கம்பர்போலப் பெரிய நூல்களைப் பாடத்தக்க அறிஞர்களும் இருக்கின்றார்களோ?' என்று கேட்டான். அதற்கு விடையாக ஔவையார்,

"வான்குருவி யின்கூடு வல்லரக்குத் தொல்கறையான்
தேன்சிலம்பி யாவர்க்குஞ் செய்யரிதால்—யாம்பெரிதும்
வல்லோமே யென்று வலிமைசொல வேண்டாங்காண்
எல்லார்க்கு மொவ்வொன் றெளிது.

"சித்திரமுங் கைப்பழக்கம் செந்தமிழும் நாப்பழக்கம்
வைத்ததொரு கல்வி மனப்பழக்கம்—நித்தம்
நடையும் நடைப்பழக்கம் நட்புந் தயையும்
கொடையும் பிறவிக் குணம்.

"வீரகர் இருவர் புகழ்ந்திடவே வேண்டும்
விரல்நிறைய மோதிரங்கள் வேண்டும்—அரையதனில்
பஞ்சேனும் பட்டேனும் வேண்டும் அவர்கவிதை
நஞ்சேனும் வேம்பேனும் நன்று.

"காணுமல் வேணதெல்லாம் கத்தலாம் கற்றோர்முன்
கோணுமல் வாய்திறக்கக் கூடாதே—நாணுமற்
பேச்சுப்பேச் சென்னும் பெரும்பூனை வந்தக்கால்
கீச்சுக்கீச் சென்னுங் கிளி"

என்னும் வெண்பாக்களால் விடையளித்தார்.

ஒருநாள் சோழன் அவையில் கம்பர் முதலிய அறிஞர்கள் கூடியிருந்தனர். அப்போது ஔவையார் அங்கு வந்தார். அவர் பொதுவாக அங்குள்ள அறிஞர்களை நோக்கி,

"கல்வி யுடையீர் கருங்கா னகத்திடையே
நெல்லி யிலையுதிர்ந்து நிற்பதெவன் ?"—

என்று கேட்டார். உடனே கம்பர்,

—"வல்லாய்கேள்
வெல்லா வழக்கை விலைவாங்கி வெல்விக்கும்
வல்லாளன் சுற்றம்போல் மாண்டு"

என்று பதில் அளித்தார். உடனே ஔவையார் கம்பரைப் பார்த்து, 'நான் அவையோரை நோக்கிப் பொதுவாகக் கேட்ட கேள்விக்கு நீவிர் ஏன் விடையளித்து என் பாட்டை முடித்தீர் ? இதுபோன்றுதான் நான் நீவிர் சிலம்பியின் வீட்டுச் சுவரில் எழுதிவைத்த பாட்டை முடித்தேன். இத்தகைய செயல்கள் அறிவு நிரம்பிய அனைவர்க்கும் இயல்பேயாகும். அவ்வாறாக, நீவிர் என்னிடத்துப் பகைமை பாராட்டியது நும் மறிவுடைமைக் கழகாகுமோ?' என்று கேட்டார். கம்பருக்கு ஔவையாரிடமிருந்த பகைமை ஒருவாறு நீங்கியது. இருவரும் நண்புடையவர்களாக ஆயினர்.

## ௩௧. செருக்ககன்று கூத்தர் சிறத்தல்

உறையூரிற் குலோத்துங்கசோழன் அரசுசெலுத்திக் கொண்டிருந்தான். அவன் அவைக்களப் புலவராக ஒட்டக்கூத்தர் என்பவர் அமர்ந்திருந்தார். அவர் மிகுந்த கல்விச்செருக்குடையவர். எவரையும் ஒரு பொருட்படுத்தமாட்டார். அவர் ஔவையாரையும் ஒரு பொருட்படுத்தவில்லை. அவர் செருக்கை அடக்க வேண்டுமென்று ஔவையார் அற்றம் பார்த்திருந்தார். ஒருபோது குலோத்துங்கசோழன் அவையில் புக ழேந்திப் புலவருக்குமட்டும் மதிப்புக்கொடுத்து ஒட்டக் கூத்தருக்கு அவமதிப்புக் கொடுத்தார். கூத்தர் ஔவை யாரை நோக்கிக் 'கிழவி, நீ என்னை அவமதிக்கக் காரணம் என்னை?' என்றார். 'புகழேந்தியார் நும்மைவிட அறிவிற் சிறந்தவராகலின் அவ்வாறு செய்தேன்' என்றார் அதற்குக் கூத்தர், 'எம்மிருவருடைய அறிவின் ஏற்றத்தாழ்ச்சிகளை உன்னால் அளவிட முடியுமா?' என்று கேட்டார். ஔவையார் "இப் போது அளவிட்டுக் காட்டுகிறேன். நற்றாய் இரங்கற் றுறையில் சோழனை முன்னிலைப்படுத்தி ஈற்றடியில் திங்களின் பெயரை மூன்று முறை அமைத்து நீ ஒரு செய்யுள் பாடு பார்க்கலாம்" என்றார். உடனே கூத்தர் விரைந்து ஒரு செய்யுளைப் பாடினார். அச்செய்யுளில் தம்மைப் பிள்ளையெனவும் ஔவையாரைப் பேதை யெனவும் குறிப்பிருக்குமாறு,

"வெள்ளத் தடங்காச் சினவாளை
வேலிக் கமுகின் மீதேறித்
துள்ளி முகிலைக் கிழித்துமழைத்
துளியோ டிறங்குஞ் சோணாடா

கள்ளக் குறும்பர் குலமறுத்த
கண்டா அண்டர் கோபாலா
பிள்ளை மதிகண் டப்பேதை
பெரிய மதியு மிழந்தானே"

என்று பாடினார். கூத்தர் எவ்வாறேனும் ஔவை யாரை இகழவேண்டும் என்னும் எண்ணத்திலேயே கருத்தாக இருந்தமையின் ஒருமதி தவறியதையும் அறியவில்லை. கூத்தரின் கூத்து ஔவையாருக்கு நன்கு விளங்கிற்று. உடனே அவர் கூத்தரைப் பார்த்து, 'ஒட்டா, ஒருமதி கெட்டாய்!' என்று தாமும் இருபொருள் அமையுமாறு கூறிவிட்டுப் புகழேந்தியைப் பாடுமாறு கேட்டுக்கொண்டார். உடனே புகழேந்தியார்,

"பங்கப் பழனத் துழுமுழவர்
பலவின் கனியைப் பறித்ததென்று
சங்கிட் டெறியக் குரங்கிளநீர்
தனைக்கொண் டெறியும் தமிழ்நாடா
கொங்கர்க் கமரா பதியளித்த
கோவே ராச குலதிலகா
வெங்கட் பிறைக்கும் கரும்பிறைக்கும்
மெலிந்த பிறைக்கும் விழிவேலே"

என்று பாடினார். ஒட்டக்கூத்தர் புகழேந்தியார் பாட்டின் சிறப்பைப் பார்த்து நாணித் தலைகவிழ்ந்தார். அதுமுதல் சோழன் புகழேந்தியரையும் மிகுதியாகக் கொண்டாடிச் சிறப்புச் செய்தான்.

ஒருகாற் சிலர் ஔவையாரைக்கண்டு திருவள்ளுவர் திருக்குறள் சுருங்கிய நூலாக விருப்பினும் அறம் பொருள் இன்பம் மூன்றும் விரிவாகக் கூறப்பட்டிருப் பதைச் சொல்லித் திருவள்ளுவர் ஆற்றலைப் பாராட்டிப் பேசினர். அதற்கு ஔவையார் 'அறம்பொருளின்பம்

மூன்றைமட்டும் சொல்லுவதற்கு ஆயிரத்து முந்நூற்று முப்பது பாடல்களா வேண்டும்? அறம்பொருள் இன்பம் என்னும் நான்கு பொருள்களையுமே கூறுவதற்கு ஒரு பாட்டுப் போதாதா? நான் ஒரே பாட்டில் அறம் பொருள் இன்பம் என்னும் மூன்ருேடு வீட்டையும் சேர்த்துக் கூறுகிறேன் பாருங்கள்' என்று கூறி,

> "ஈதலறம்; தீவினைவிட் டீட்டல் பொருள்; எஞ்ஞான்றும்
> காத லிருவர் கருத்தொருமித்—தாதரவு
> பட்டதே யின்பம்; பரனைநினைந் திம்மூன்றும்
> விட்டதே பேரின்ப வீடு."

என்று பாடினர். இதனைக் கேட்டோர் ஔவையார் ஆற்றல் திருவள்ளுவர் ஆற்றலினும் அதிகமென்று வியந்து சென்றனர். அதியமான் அளித்த நெல்லிக் கனியின் சிறப்பால் ஔவையார் தமிழகத்தில் நீண்ட நாள் வாழ்ந்திருந்தாரென்றும்; மூத்தபிள்ளையாருடைய திருவருளால் சிலமுறை கைலைமலைக்குச் சென்று வந்தா ரென்றும், இறுதியில் கைலைக்கே சென்று விட்டா ரென்றும் வரலாறுகள் வழங்குகின்றன. ஔவையாரின் பெயரால் பல பாடல்கள் வழங்குவதன்றிச் சில நூல் களும் வழங்குகின்றன. ஔவையார் உண்மை அறிவு கைவரப்பெற்ற மெய்யறிவாளர். தம்முடைய நடக்கை முறையில் உள்ளவாறுணர்ந்த மறுமையறிவுக்குரிய பொருள்கள் பலவற்றைத் திரட்டிக் குறள்வெண்பாக்க ளாக அமைத்துவைத்தார். அந்நூல் அவருடைய பெயரால் 'ஔவை குறள்' என்று வழங்குகின்றது. இதுவே ஔவையாருடைய நூல்களிலும் பாடல் களிலும் மிகச் சிறந்ததாகும்.

---

## உ. கம்பர்

சோழநாட்டிலுள்ள திருவழுந்தூரில் "விருத்த மென்னும் ஒண்பாவி லுயர் கம்பன்" என்று விதந்தோதப் பெற்ற கம்பர் பிறந்தார். அவருடைய பிள்ளைப் பெயரும் தாய் தந்தையரைப்பற்றிய வரலாறும் விளக்கமாகத் தெரியவில்லை. கம்பரின் குழவிக் காலத்தில் தாய் தந்தையர் இருவரும் இறந்துவிடச், சிலர் கம்பரைத் திருவெண்ணெய் நல்லூர் சடையப்பவள்ளலிடம் சேர்த்து அவருடைய ஆதரவைப் பெறும்படி செய்ததாக ஒரு வரலாறு வழங்குகின்றது. மற்றொரு வரலாறோ கம்பரின் தாயே கம்பரைத் தூக்கிக்கொண்டு திருவெண்ணெய் நல்லூருக்குச் சென்று சடையப்ப வள்ளலின் ஆதரவில் இருந்ததாகத் தெரிவிக்கிறது. எது எவ்விதமாயினும் கம்பர் திருவெண்ணெய் நல்லூர்ச் சடையப்பவள்ளலின் ஆதரவைப்பெற்று முன்னுக்கு வந்தவர் என்பதில் மட்டும் சிறிதும் ஐயப்பாடில்லை. இதனை,

"பெற்று வளர்த்தும் வித்தைதனைப்
பேணிக் கொடுத்தும் பெயர்கொடுத்தும்
பற்ற வரும்பா லமுதளித்தும்
பகைத்த வறுமைப் பயந்தீர்த்தும்
கற்ற முதனூல் திருவழுந்தூர்க்
கம்பன் தழைபக் கருணைசெய்தோர்
மற்றும் புலவோ ரையும்வாழ
வைத்தார் சோழ மண்டலமே"

என்னும் சோழமண்டல சதகப்பாட்டும் வலியுறுத்து கின்றது.

கம்பர், தம்மை முன்னுக்குக் கொண்டுவந்த சடையப்பவள்ளல்மீது ஒரு புகழ்நூல் பாட விரும்பினார்

அக்கருத்தைச் சடையப்பவள்ளலுக்குக் குறிப்பிட்டார். அவ்வள்ளல் தற்புகழ்ச்சியை விரும்பவில்லை. கம்பர் மிகவும் வற்புறுத்திக் கேட்டுக்கொண்டதற்குப்பின் தம் குலத்தையும் உழவு தொழிலையும் பாடுதற்கு உடன் பட்டார். அதன்மேல் கம்பர் ஏரெழுபது என்னும் எழுபது பாடல்களடங்கிய சிறிய நூலைச் செய்து அரங் கேற்றினார். ஒருநாள் கம்பரும் சடையப்பவள்ளலும் காவிரியில் நீராடுதற்குச் சென்றனர். அப்போது கம்பர் காவிரியை நோக்கி,

"மெய்கழுவி வந்து விருந்துண்டு மீளுமவர்
கைகழுவ நீர்போதுங் காவிரியே—பொய்கழுவும்
போர்வேள் சடையன் புதுவையான் தன்புகழை
ஆர்போற்ற வல்லார் அறிந்து"

என்று சடையப்பர் விருந்தோம்பும் வண்மையை வியந்து பாராட்டிப் பாடினார்.

கம்பருடைய சீர்த்தி தமிழ்நாடெங்கும் பரவியது. அந்நாளில் அரசுபுரிந்து கொண்டிருந்த சோழ மன்னன் கம்பரை வரவழைத்துத் தன்னுடைய அவைக்களத்தில் தலைமைப்புலவராக அமரச்செய்தான். அவரும் அவ் வாறே அமர்ந்து அரசனைப் பலவழிகளிலும் மகிழச் செய்திருந்தார். ஒரு சமயம் காவிரியாறு பெருக் கெடுத்துக் கரைபுரண்டு பலவூர்களையும் அழித்துக் கொண்டு சென்றது. மக்களும் அரசனும் மேலும் காவிரிப்பெருக்கு என்ன தீமையைச் செய்யுமோ என்று அஞ்சிக் கலங்கி நின்றனர். அப்போது கம்பர் காவிரியை நோக்கி,

"கன்னி அழிந்தனள் கங்கை திறம்பினள்
பொன்னி கரையழிந்து போனாளென்—றிந்நீர்
உரைகிடக்க லாமோ உலகுடைய தாயே
கரைகடக்க லாகாது காண்"

என்னும் வெண்பாவை இயம்பினார். காவிரிப் பெருக்கும் கம்பர் வாக்கிற்குக் கட்டுப்பட்டதுபோல ஒருவாறு அடங்கியது. கம்பரின் அருமையையும் பெருமையையும் நன்குணர்ந்த சோழன் அவருக்கு வளப்பம் பொருந்திய ஓர் ஊரைப் பரிசாக அளித்தான். அவ்வூர் 'கம்பநாடு' என்று பெயர் பெற்றது. அந்நாட்டின் வரவையெல்லாம் கம்பர் வறியோர்களுக்கு வழங்கி மகிழ்ந்தார்.

கம்பருக்குச் சோழன் ஒரு பெரிய மாளிகை அமைத்துக் கொடுத்தான். புதுமனைபுகும் விழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. அவ்விழாவிற்கு, மூவேந்தரும், குறுநில மன்னரும், பல செல்வர்களும், அறிஞர்களும் வந்திருந்தனர். அங்கு திருவெண்ணெய் நல்லூர்ச் சடையப்பவள்ளலும் வந்தார். மக்களின் மிகுதியால் சடையப்பவள்ளலுக்குத் தக்க இடம் அகப்படவில்லை; ஓர் ஒதுக்குப்புறத்தில் உட்கார்ந்தார். மூவேந்தரும் சடையப்பவள்ளலைப் பார்த்து, 'இங்கே வாருங்கள்; இங்கே வாருங்கள்' என்று கூப்பிட்டனர். கம்பர் மூவேந்தரையும் நோக்கி 'அவரை நான் வைக்க வேண்டிய இடத்தில் வைக்கிறேன். இப்போது அங்கே இருப்பதனால் ஒன்றும் தாழ்வு வந்துவிடாது' என்று கூறினார்.

ஒருநாள் கம்பர் வயல்களின் வழியாகச் சென்று கொண்டிருந்தார். அப்போது அங்கு ஏற்றம் இறைத்துக்கொண்டிருந்த பண்ணையாட்கள் "மூங்கில் இலைமேலே" என்று பாடி இறைத்துக்கொண்டிருந்தனர். கம்பர் சென்றபோது உணவு உட்கொள்ளும் நேரமாகையால் ஏற்றம் இறைத்தலை நிறுத்திவிட்டுச் சாப்பிடச் சென்றனர். அவ்வாட்கள் 'மூங்கில் இலை

மேலே' என்று கூறிப் பாடியது கம்பருக்கு ஆழ்ந்த எண்ணத்தை உண்டாக்கியது. 'ஆலிலைமேல் திருமால் உறங்குகின்றார்? மூங்கில் இலைமேல் யார் உறங்குகின்றார்?' என்று எண்ணமிட்டார். ஒன்றும் விளங்கவில்லை. அவ்வாட்கள் திரும்பி வந்து ஏற்றத்தை இறைக்கத் தொடங்கும் வரையும் ஆங்கோரிடத்தில் நின்றிருந்தார். சாப்பிடச் சென்ற ஆட்களும் திரும்பி வந்து வேலையைத் தொடங்கியவுடன், விட்ட பாட்டையும் பாடத் தொடங்கி "மூங்கில் இலைமேலே தூங்கும் பனி நீரே - தூங்கும் பனிநீரை வாங்கும் கதிரோனே" என்று பாடி இறைத்தார்கள். இதனைக்கேட்ட கம்பர் வியந்து 'ஏற்றப்பாட்டிற்கு எதிர்ப்பாட்டு இல்லை' என்று கூறிக்கொண்டு அவ்விடத்தை விட்டு நீங்கினார்.

கல்வி கேள்விகளிற் சிறந்துவிளங்கிய கம்பர் தென்மொழியாகிய தமிழிலே மட்டுமன்றி வடமொழியிலும் சிறந்த அறிவுடையவராக விளங்கினார். வடமொழிக் கண்ணுள்ள யாதானுமோர் அரிய நூலைத் தமிழிலே மொழிபெயர்த்துப் பாடவேண்டுமென்பது அவருடைய நீண்ட நாளைய அவாவாக விருந்தது. அதற்குத் தக்க வடமொழி நூல் யாதென்று ஆராய்ந்தார். வடமொழியில் வான்மீகி முனிவர் பாடியுள்ள இராமாயணமே அதற்குத் தகுதியானதென்று முடிவுசெய்து அதனை அம்மொழிவல்ல சிலரையும் உடனுதவியாக வைத்துக்கொண்டு, 'இராமாவதாரம்' என்று அதற்குப் பெயர் கொடுத்துப் பாடலானார்.

கம்பர் தம்முடைய இராமகாதையைத் திருவொற்றியூரில் பாடியதாகவும், அப்போது இராப்பகலாத் தினம் ஒன்றுக்கு எழுநூறு பாடல்கள் பாடியதாகவும் ஒற்றியூர்க்காளி வந்து தீப்பந்தம் பிடிக்குமாறு,

"ஒற்றியூர் காக்க உறைகின்ற காளியே
வெற்றியூர் காகுத்தன் மெய்ச்சரிதை—பற்றியே
நந்தா தெழுதற்கு நல்லிரவின் மாணுக்கர்
பிந்தாமற் பந்தம் பிடி"

என்று பாடியதாகவும் கதைகள் வழங்குகின்றன. இராமாயண வரலாற்றைப்பற்றி வழிவழியாக வழங்கி வரும் கதையாவது :—

கம்பருடைய கல்வித்திறத்தை நன்குணர்ந்திருந்த சடையப்பவள்ளல், நற்கதையாகிய இராம காதையைத் தமிழிலே பாடினுல் உலகத்தாருக்கு மிகவும் பயன்படுமென்று கம்பரிடம் கூறினுர். கம்பர் அவ்வாறே செய்வதாகக்கூறி நீண்டநாள் ஒன்றும் செய்யாதிருந்துவிட்டார். கம்பர் தாம் சொல்லியதைப் பொருட்படுத்தாதிருத்தலை யறிந்த சடையப்பவள்ளல், தம்முடைய கருத்தைச் சோழ மன்னனுக்குத் தெரியப் படுத்தினுர். சோழ மன்னனும் அவ்வாறு செய்வது நல்லதுதான் என்று முடிவு செய்தான். கம்பரை மட்டும் பாடச்சொன்னுல் விரைவாக முடியாது என்று எண்ணினுன். கம்பர் ஒட்டக்கூத்தர் இருவரையும் பார்த்து 'நீங்கள் தனித்தனியே இராமாயணத்தைத் தமிழில் பாடிக்கொண்டு வாருங்கள்' என்று கட்டளை பிறப்பித்தான். அதற்கு அவர்களும் ஒப்புக்கொண்டு "அப்படியே பாடுகிறேம்" என்றனர்.

ஒட்டக்கூத்தர் அன்றையத்தினமே பாடத் தொடங்கிப் பாலகாண்டம் முதல் ஐந்து காண்டங்கள் பாடி, ஆருவதாக யுத்தகாண்டத்திலும் கடல்காண் படலம் வரையில் பாடி முடித்திருந்தார். கம்பரோ அதுவரையில் கடவுள் வணக்கங்கூடப் பாடவில்லை. சடையப்பவள்ளலுக்குக் கம்பர் பாடவில்லை என்னும்

செய்தி தெரிந்தது. அவர் சோழ அரசனைக்கண்டு, 'கம்பரையும் ஒட்டக்கூத்தரையும் இராமாயணம் பாடச்சொல்லி யிருந்தீர்களே; எதுவரையில் முடிந்திருக்கிறதென்று கேட்டீர்களா?' என்று நினைவூட்டினார். உடனே அரசன் அறிஞர் இருவரையும் பார்த்து இராமாயணம் எவ்வளவு பாடப்பெற்றிருக்கிறதென்று வினவினான். ஒட்டக்கூத்தர் தாம் பாடியுள்ளதைக் கூறினார். கம்பரோ அதுவரை ஒன்றும் பாடாதிருந்தும், தாம் ஒட்டக்கூத்தரைவிட அதிகமாகக் கூற வெண்ணித் தாம் கடல்காண் படலத்திற்கு அப்பாலுள்ள திருவணைப்படலம் வரையில் பாடியுள்ளதாகக் கூறினார். 'அப்படியாயின் அப்படலச் செய்யுட்கள் சிலவற்றைக் கூறிச் சொற்பொழிவு செய்யும்' என்றனன். கம்பர் கலைமகள் திருவருளை இயற்கையாகவே பெற்றிருந்தாராதலின், உடனே அப்படலத்தைப் பாடிக் கொண்டே சொற்பொழிவும் செய்தார். அதனைக் கேட்டு அங்குள்ளாரனைவரும் உவகை யெய்தினர். அப்படலத்தின் பாட்டொன்றில் துளி யென்பதற்குப் பதிலாகத் துமியென்று தவறாகக் கூறினார். உடனே ஒட்டக்கூத்தர் 'துளியைத் துமியென்றீரே' அவ்வாறு எங்கேனும் வழங்கப்பட்டிருக்கிறதா?' என்று கேட்டார். கம்பர், 'நூல்களில் வழங்கப்பெறவில்லை; உலக வழக்கு' என்றார். அப்படியாயின் அதனை மெய்ப்பிக்க வேண்டும்' என்றார் ஒட்டக்கூத்தர். மறுதினம் அப்படியே செய்வதாகக்கூறிக் கம்பர் சென்றுவிட்டார். சென்றவர் இந்தத் தொல்லையிலிருந்து தம்மை எப்படியேனும் விடுவித்தருள வேண்டுமென்று கலைமகளை நோக்கி ஓரந்தாதியைப் பாடி வேண்டினார். கலைமகள் தோன்றி, 'இதற்காக வருத்தப்படவேண்டாம்.

நாளைக்கு அடுத்துள்ள இடைத்தெருவுக்கு வா' என்று கூறி மறைந்தாள்.

மறுநாட் காலையில் கம்பர் சோழனையும் ஒட்டக் கூத்தரையும் அழைத்துக்கொண்டு கலைமகள் குறிப் பிட்ட இடைத்தெருவுக்குச் சென்றார். அங்கே ஒருத்தி ஒருவீட்டில் தயிர் கடைந்துகொண்டிருந்தாள். அவளைச் சூழ்ந்து சில சிறுவர்கள் இருந்தனர். அவள் அச் சிறுவர்களைப் பார்த்து, 'சிறுவர்களே, மோர்த்துமி தெரிக்கப்போகிறது; தூர இருங்கள்' என்று கூறினாள். அவள் கூறியது சோழவரசனும் அறிஞர்களும் தெரு விற்சென்ற சமயமாக விருந்தது. அவள் கூறியது அவர்களுடைய காதுகளிலும் நன்கு கேட்டது. உடனே கம்பர் ஒட்டக்கூத்தரைப் பார்த்துக், 'கேட் டீரோ?' என்றார். ஒட்டக்கூத்தர் 'கேட்டேன்' என்று ஒப்புக்கொண்டார். ஆயினும் அவர் சற்று ஆய்ந்துபார்த்து, 'இது குடியில்லாத வீடு ஆயிற்றே; இப்போது இதில் யாராவது குடிவந்திருக்கிறார்களா, என்று எண்ணி, வீட்டிற்குள்ளேசென்று பார்த்தார். வீட்டில் எவரும் இல்லை. இது கலைமகள் திருவிளை யாட்டே என்று தேறியவராய்ச் சென்றுவிட்டார். ஒட்டக்கூத்தர் இராமாயணத்தின் மற்றைப் பகுதியையும் பாடி முடித்தார். ஆயினும் அவ ருடைய உள்ளத்தில் நிறைவேற்படவில்லை. கம்ப ருக்குக் கலைமகள் அருள் மிகுதியாக விருப்பதால் கம்ப ருடைய இராமாயணத்திற்கு முன்பு தம்முடைய இராமாயணம் தலையெடாது என்று எண்ணினார். தாம் பாடியவற்றை யெல்லாம் கிழித்தெறிந்து கொண்டிருந் தார். அப்போது ஒட்டக்கூத்தருடைய வீட்டிற்குக் கம்பர் ஏதோ ஓர் அலுவலாகச் சென்றார். அவர் ஒட்டக்

கூத்தர் கிழித்தெறிவது யாதென்று பார்த்தபோது, அஃது அவர் பாடிய இராமாயணம் என்று தெரிந்தது. உடனே மேலே கிழிக்கவொட்டாமல் தடை செய்து விட்டார் ஆயினும் அதற்குள் யுத்தகாண்டம்வரையி லும் ஆறு காண்டங்கள் கிழிபட்டுப் போயின. கம்பர் வருந்தி, 'அருமையாய்ப் பாடியதை இப்படிக் கிழித் தெறியலாமா? உத்தரகாண்டமாவது அப்படியே இருக் கட்டும். நான் ஆறு காண்டங்கள் தான் பாடியுள்ளேன். அதனுடன் இதுவுஞ் சேர்ந்து இராமாயணம் முழு வதும் முடிவாகட்டும்' என்று கூறினர். கம்பர் கூறிய தற்கு ஒட்டக்கூத்தரும் உடன்பட்டார். அப்படியே இருவருடையவைகளும் ஒன்றுசேர்க்கப்பட்டு, மிகுதி பற்றிக் கம்பருடைய பெயரினல் கம்பராமாயணம் என்றே வழங்கப்பெறலாயிற்று.

கம்பர் திருவரங்கத்திற்குச் சென்று தம்முடைய இராமாயணத்தை அரங்கேற்றுதற்கு எண்ணினர். அப்போது அங்கு வைணவ ஆசாரியராக இருந்த ஒருவ ரிடம் சென்று தம்முடைய எண்ணத்தை வெளி யிட்டார். அவரும் அதற்கு உடன்பட்டார். சடகோப ரைக் குறித்து ஏதேனும் ஒருநூல் பாடவேண்டுமென் றும் கேட்டுக்கொண்டார். கம்பரும் அவருடைய வேண்டுகோளுக் கிணங்கிச், 'சடகோபரந்தாதி' என்னும் அந்தாதி யொன்றைப் பாடினர். இராமாயண அரங் கேற்றத்தின்பொருட்டு இராமன் திருமணம் புரிந்த பங்குனி உத்திர நாளைக் குறிப்பிட்டு, அதற்கு ஆக வேண்டியவைகளையுஞ் செய்தனர். பின்னர், குறிப் பிடப்பெற்ற நன்னளில் இராமாயண அரங்கேற்றமும் இனிது நிகழ்ந்தது. அவையோர் பலர் தங்களுக் கேற் பட்ட ஐயங்களை யெல்லாம் கேட்டனர். அனைவ

ருடைய ஐயத்தையும் கம்பர் அகற்றினர். இரணிய வதைப் படலத்தின்கண் வரும்,

நகைதிறந் திலங்கப் பொங்கி நன்றுநன் றென்ன நக்கு
விசைவிதந் துருமு வீழ்ந்த தென்னவோர் தூணின் வென்றி
இசைதிறந் தமர்ந்த கையால் எற்றினன் எற்ற லோடும்
திசைதிறந் தண்டங் கீறிச் சிரித்தது செங்கட் சீயம்

என்னும் பாட்டினைப் படித்தபொழுது அந்தத் திருவரங்கத்துப் பெரிய கோயிலின்கண் இருந்த மேட்டழகிய சிங்கரின் உருவக்கல் மக்கள் அஞ்சி நடுநடுங்குமாறு நகைத்ததாம். அதனைக் கண்ட மக்கள் அனைவரும் கம்பராமாயணத்தின் பெருமையே பெருமையென்று மிகுதியும் வியந்து புகழ்ந்தனராம்.

இறுதியில் முடிசூடு படலத்தில்,

அரியணை அனுமன் தாங்க அங்கதன் உடைவாள் ஏந்தப்
பரதன்வெண் குடைக விக்க இருவருங் கவரி வீச
விரைசெரி குழலி ஓங்க வெண்ணெயூர்ச் சடையன் தங்கள்
மரபுளோர் கொடுக்க வாங்கி வசிட்டனே புனைந்தான் மௌலி

என்னும் அரிய செய்யுளைப் படித்து முடித்ததும் அவைக்களத்தினர் அனைவரும் கம்பர்மீது மலர்மாரி பொழிந்தனர். பார்ப்பனர் பல்லாண்டு பாடினர். அப்போது அவ்வவையிலிருந்த பெரியோர்களால், ‘கவிச் சக்கரவர்த்தி’ என்னும் சிறப்புப் பெயர் கம்பருக்கு வழங்கப்பட்டது. கம்பர் இராமாயணத்தில் சடையப்பவள்ளலைப் புகழ்ந்து பாடவேண்டுமென்று முன்னரே திட்டமிட்டிருந்தபடி நூறுபாடலுக் கொருமுறை அவரைப் புகழ்ந்து பாடியிருந்தார். அவைக்களத்திலிருந்த வைணவ ஆசாரியார் ஒருவர் கம்பரைப் பார்த்து, ‘சடையப்ப வள்ளல் நூறுபாடலுக் கொருமுறை புகழப்பட்டிருப்பது தக்கதன்று. ஆயிரம் பாடல்களுக்கொருமுறை

அவருடைய புகழ்ப்பாடல் இருந்தாற் போதுமென்றார். கம்பர், அதற்குப் பெரிதும் உடன்பட்டு 'நூற்றுக்கொரு தடவை புகழ்வதைவிட ஆயிரத்திற் கொருதடவை புகழ்வதுதான் மிகச்சிறந்தது. இஃது எளியேனுடைய அறிவிற்கு எட்டாமற் போயிற்று. சடையப்பவள்ள லின் புகழை ஆயிரத்திற் கொன்றாகவே வைக்கிறேன்' என்று மகிழ்ந்து கூறினார். பின்னர் இராமாயண அரங் கேற்றம் நிறைவேறியது. பிறகு சின்னாள் திருவரங் கத்திலிருந்து திருவெண்ணெய் நல்லூருக்குச் சென்றார். இராமாயணத்தின் இனிமையைச் சடையப்பவள்ள லுக்கு இனிது ஊட்டினார். பிறகு சோழமன்னன் பேரவைக்குச் சென்று ஆங்கும் இராமாயணத்தைப் படித்து விரித்துரைத்தார். சோழமன்னன் தக்க பரிசி லளித்துக் கம்பரைப் போற்றினான்.

அந்நாளில் ஓர் ஏழைக் குடியானவன் பெருங் குடும்பியாயிருந்தான். அவன் மனைவி சிறிது அறிவுடைய ளாயினும், அக்குடியானவன் முழு மடையன். அவன் எவ்வளவோ தொல்லைப்பட்டும் குடும்பத்தை நன்கு பாதுகாக்க முடியவில்லை. அக்குடியானவன் மனைவி சோழன்மீது யாதேனும் செய்யுள் செய்துகொண்டு சென்று பரிசுபெற்று வருமாறு வற்புறுத்தினாள். அவள் தொல்லையைப் பொறாத அக்குடியானவன் வெளியே சென்று தன்னுடைய நண்பர்களைக் கலந்து எவ்வா றேனும் சோழராசர்மீது பாட்டுப் பாடிக்கொண்டு வரலாமென்று வெளியே புறப்பட்டான். சில சிறுவர்கள் தெருவில் மரப்பொம்மைகளை வைத்து விளையாடிக் கொண்டிருந்தனர். அவர்கள் அம் மரப்பொம்மைகளைப் பார்த்து, 'மண்ணுண்ணி மாப்பிள்ளையே' என்று கூறி, மண்ணை அள்ளி வாயில் ஊட்டிக்கொண்டிருந்தனர்.

அதனைக் கண்ட குடியானவன் தன்னுடைய வேலையைத் தொடங்கினான். ஓலையை எடுத்தான். "மண்ணுண்ணி மாப்பிள்ளையே" என்று எழுதிக்கொண்டு மேலே நடந்தான். ஒரு காகம் 'காகா' என்று கத்திக்கொண்டிருந்தது. அதனைக் "காவிறையே" என்று எழுதிக் கொண்டான். பின்னும் சிறிது தொலை சென்றான். ஒரு சோலையில் ஒரு குயில் கூவிக்கொண்டிருந்தது. அதனைக் கேட்டவுடன் "கூவிறையே" என்று எழுதிக் கொண்டு மேலும் நடந்தான். ஓரிடத்தில் சிலர் நின்று பேசிக்கொண்டிருந்தனர். அவர்கள் என்ன பேசுகிறார்கள் என்று நின்று உற்றுக் கேட்டான். ஒன்றும் விளங்கவில்லை. "உங்களப்பன்" என்று ஒரு சொல்மட்டும் விளங்கிற்று. அதனை எழுதிக்கொண்டு மேலும் நடந்தான். ஒரு கோவிலையொட்டிச் சென்றபோது ஒரு பெருச்சாளி கோவிலுக்குள் ஓடிற்று. அதனைப் பார்த்ததும் "கோவிற் பெருச்சாளி" என்று மற்றொரு சொல்லைக் கூட்டினான். சிறிது தொலை சென்றபோது குடியானவனுடைய நண்பர்கள் சிலர் எதிர்ப்பட்டனர். அவர்களைப் பார்த்து 'எவ்வாறு பாட்டுப் பாடுவது?' என்று கேட்டான். அவர்களில் ஒருவன், 'பாட்டுப் பாடுவதென்ன பெரிய வேலையா?' "கன்னா பின்னா மன்னா தென்னா என்று எழுதிக்கொண்டு போ" என்றான். உடனே அதனையும் தன்னுடைய பாட்டோடு சேர்த்துக்கொண்டு வீட்டிற்குச் சென்று மனைவியிடம் காட்டினான். அம்மாது 'இப்பாட்டில் அரசன் பெயரில்லையே' என்றாள். அந்நாளில் மக்கள் சோழராசன் பெயரைச் 'சோழங்கப் பெருமான்' என்று கூறுவது வழக்கம். ஆகவே, அதையும் இறுதியிற் சேர்த்துப் பாட்டை முடிவுசெய்தான். உடனே அதைக் கொண்டு

போய் அரசனிடம் காட்டிப் பரிசு பெற்றுவிடவேண்டு மென்று அவனுள்ளத்தில் பெரும் வேட்கை யுண்டா யிற்று. விரைந்து சோழராசனது பேரவைக்குச் சென்றான். அங்குக் கம்பர் முதலிய அறிஞர்கள் சூழ்ந் திருக்கச், சோழமன்னன் அரியணையில் அமர்ந்திருந்தான். அவன்முன் குடியானவன் தனது பாட்டை,

மண்ணுண்ணி மாப்பிள்ளையே
காவிறையே கூவிறையே
உங்கள் அப்பன் கோவிற் பெருச்சாளி
கன்னா பின்னா மன்னா தென்னா
சோழங்கப் பெருமானே

என்று நீட்டி முழக்கிப் படித்தான்.

குடியானவன் பாடிய பாட்டைக் கேட்டு அறிஞர் கள் அரசன் முதலிய அனைவரும் நகைத்தனர். அக் குடியானவன் மிகுந்த வறுமையின் கொடுமையால் அவ்வாறு ஏதோ பிதற்றிக்கொண்டு வந்திருக்கிறான் என்பது அவனுடைய தோற்றத்திலிருந்து கம்பருக்கு விளங்கிற்று. அரசனிடம் எவ்வாறேனும் பரிசுபெறச் செய்யவேண்டுமென்று முடிவுசெய்தார். அவர் உடனே நகைத்தவர்களைப் பார்த்து, 'இவன் பாடியுள்ளது நல்ல பாட்டுத்தான். தகுதியானபடி பரிசளிக்கலாம்' என்றார். உடனே அவையோர் அவ்வாறாயின் பாடலுக்கு நீவிரே பொருள் விரியுமென்றனர். உடனே கம்பர் பொருள் உரைக்கத் தொடங்கினார்.

மண் - நிலத்தை, உண்ணி - உண்டவனே, மா - திரு மகளுக்கு, பிள்ளையே - மகனே, கா - கற்பகச்சோலைக்கு, இறையே - தலைவனே, கூ - நிலத்திற்கு, இறையே - அரசனே, உங்கள் அப்பன்-உங்களுடைய தந்தையாகிய, கோ - அரசன், வில் - விற்போரிலே, பெரிசு ஆளி -

பெரிய சிங்கத்தைப் போன்றவன், கன்னு - கொடையில் கன்னனைப் போன்றவனே, பின்னு - போர் செய்வதிலே பின்னிடாத, மன்னு - அரசனே, தென்னு - தென்னாட்டையும் (பாண்டியநாட்டையும்) வென்றடக்கியோனே, சோழங்கப் பெருமானே - சோழவரசனே.

"திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே" என்ப வாகலின் ஈண்டுச் சோழன் மண்ணுண்ணியாகிய திருமாலோடு ஒப்பிடப்பெற்று 'மண்ணுண்ணியே' என்று கூறப்பெற்றான். நம் மரசன் அழகில் திருமகள் மகனாகிய காமனுக்குச் சிறிதும் குறைந்தவனல்லன் என்பது தோன்ற 'மாப்பிள்ளை' என்று சிறப்பிக்கப் பெற்றான். தேவர் கோவாகிய இந்திரன் போன்ற செல்வத்திற் சிறந்தவனென்பது தோன்றக் "காவிறை" என்னப்பெற்றான். சோழநாட்டிற்கு மட்டுமின்றி நிலவுலகமனைத்திற்குமே இறைவனாகத் தக்க சிறப்புடையான் என்பது தோன்றக் 'கூவிறை' என்னப் பெற்றான். இப்பாட்டு இடையிடையே சீர்கள் குறைந்திருத்தலால் இணைக்குறளாசிரியப்பாவாகும். 'மண்' என்னும் மங்கலமொழியைக் கொண்டு தொடங்கப் பெற்றிருக்கின்றது. மற்றும் எல்லா வகையான சிறப்புக்களும் இப்பாட்டில் அமைந்திருக்கின்றன" என்று கூறினார். அவையிலிருந்த அறிஞர்களும் சோழ மன்னனும் கம்பருடைய உரை காணும் ஆற்றலை வியந்து புகழ்ந்து பேசினர். குடியானவனுக்குப் பெரும் பரிசில் கிடைத்தது. அவனைப் பிடித்திருந்த வறுமையும் அன்றோடே தொலைந்தது. அவனும் போலிக் கல்விக்கு ஏற்பட்ட சிறப்பைப் பார்த்து வியந்து உண்மைக் கல்வி கற்றுச் சிறப்படைந்தான். மனம் போனவாறு பிதற்றிவந்த பிதற்றுரைக்

குக் கம்பர் இவ்வாறு அழகாகப் பொருளுரைத்தாரே ; பொருளமைதியுடன் கட்டப்பெற்ற பாடல்களுக்கு எவ்வாறு பொருளுரைப் பாரோ என்று அறிஞர்கள் அன்று முதல் கம்பரைப் புகழ்ந்து கொண்டாடத் தொடங்கியதுமன்றி மற்ருேருடைய சொற்களில் தவறு காண்டலேயும் மறந்திருந்தனர்.

ஒரு நாள் குலோத்துங்க சோழனும் கம்பரும் வெளியே உலாவச் சென்றனர். ஓரழகிய மலர்க்கா விடை உலாவி வரும்போது குலோத்துங்க மன்னன் திடீரென்று பெரும் நகை புரிந்தான். அவன் நகைத்த தற்குக் காரணம் யாதென வினவினுர் கம்பர். " இவ் வழகிய நாடும் இதிலுள்ள மக்களும் எனக்கடிமை யல்லவா ; அதை நினைக்கும்போது எனக்கு நகைப் புண்டாயிற்று" என்ருன். அரசன் கூறியதைக் கேட்ட கம்பர் " இந்நாடும் இதிலுள்ள மக்களும் தங்களுக் கடிமையென்பதும், தாங்கள் எனக்கடிமையென்பதும், உண்மையே " என்று கூறித் தாமும் நகைத்தார். கம்பர் இவ்வாறு கூறியது அம்புபோல் மன்னனைத் தாக்கியது. அவனுள்ளம் ஒருவாறு மாறுதலடைந்தது. அவன் சிறிது நேரம் கம்பருடன் பொய்யாக உலாவி நடித்துவிட்டு அரண்மனைக்குத் தனியே சென்று மனந் திரிந்து வாட்டமடைந்திருந்தான். அவன் காதற் பரத்தை அரசனுடைய வாட்டத்தை யறிந்து, ' நான் கம்பரை என்னுடைய தாதி பொன்னிக்கு அடிமை யென்று எழுதி வாங்கித் தருகிறே" னென்ருள். அரச னும் அவ்வாறே விரைந்து செய்யுமாறு கேட்டுக் கொண்டான்.

ஒரு நாள் கம்பர் அக்கணிகையினுடைய வீட்டு வாசல் வழியே சென்ருர். அப்போது கணிகை அவரை

வீட்டிற்குக் கூப்பிட்டாள். கம்பரும் சென்றார். தன்னருகில் அமருமாறு கூறினாள். கம்பரோ எட்ட அமர்ந்தார். ஒருவாறு சூழ்ச்சி செய்து தன்னுடைய தாதி பொன்னிக்குக் கம்பர் அடிமை என்று எழுதித் தருமாறு கேட்டாள். அவரும் ஏதோ சூது நடந்திருக்கிறது என்று எண்ணியவராய், ஓர் ஓலையில், 'தாசி பொன்னிக்குக் கம்பர் அடிமை' என்று எழுதிக் கையெழுத்தும் போட்டுக்கொடுத்தார். அதனைப் பெற்ற கணிகை விரைந்து அரசனிடம் கொண்டுபோய்க் கொடுத்தாள். அரசன் மறுநாள் அவை கூடியபொழுது அவ்வோலையைக் கொண்டுவந்து அவையில் படிக்கச் செய்தான். கம்பரைப் பார்த்து, 'நீர் தாசி பொன்னிக்கு அடிமையா?' என்று கேட்டான். கம்பரோ மிகுந்த செருக்குடன், 'ஆமாம்' என்றார். சோழன் மீண்டும் கம்பரைப் பார்த்து, 'நீர் தாசி பொன்னிக்கு அடிமை' யென்பது உமக்கு நாணத்தையும் இழிவையும் தரவில்லையா?' என்று கேட்டான். அதற்குக் கம்பர், 'தாசி பொன்னி' என்பதின் உண்மைப் பொருளை அறிந்தால் நாணத்தக்கது ஒன்றுமில்லை. 'அதற்குப் பொருளென்னை யென்றால், 'தா-தாயாகிய, சி-அழகிய பொன்னிக்கு - திருமகளுக்கு, கம்பர் - கம்பனாகிய யான், அடிமை - அடிமைத்தொழில் செய்பவன். தாயாகிய அழகிய திருமகளுக்குக் கம்பனாகிய நான் அடிமை. தாய் - என்பதில் யகரந் தொக்கது. சீ - என்பதில் ஈகாரம் இகரமாகக் குறுகிற்று, என்றார். அவையிலிருந்த அறிஞர்களனைவரும் வியப்புற்றிருந்தனர். குலோத்துங்கசோழன் அவையினரைப் பார்த்து இந்த அறிஞர்களைச் சிறிதும் நம்பவே முடியாது. தாங்கள் அறிவில்லாதவர்களென்று ஒப்புக்கொண்டு, பின்னர்

அறிவில் - ஆதவர் - சூரியரென்று சாதிப்பார்கள். அறிஞர்கள் கூட்டத்தின் போக்கே இப்படித்தான்.'

'போற்றினும் போற்றுவர் பொருள்கொ டாவிடில்
தூற்றினும் தூற்றுவர் சொன்ன சொற்களை
மாற்றினும் மாற்றுவர் வன்க ணாளர்கள்
கூற்றினும் பாவலர் கொடிய ராவரே'

என்று கூறினன். குலோத்துங்க சோழனுடைய வெகுளி அடங்கவில்லை. 'நீவிர் நாம் தந்தவற்றை யெல்லாம் கொடுத்துவிட்டு, நம்முடைய நாட்டைவிட்டு நீங்குவீராக' என்று கூறினன். அரசன் சுடுசொல் கம்பரை வருத்தியது. உடனே,

'காதம் இருபத்து நான்கொழியக் காசினியை
ஓதக் கடல்கொண் டொளித்ததோ—மாதவா!
கொல்லி மலையுடைய கொற்றவா! நீ முனிந்தால்
இல்லையோ எங்கட் கிடம்'

என்னும் செய்யுளைக் கூறிவிட்டு உடுத்தியிருந்த உடையுடன் பாண்டிநாட்டை நோக்கிப் புறப்பட்டுச் சென்றார். வழியில் அவ்வவ்விடங்களில் கூலிவேலை செய்தோ, அறிஞர்களிருந்தால் செய்யுளிசைத்தோ உதவி பெற்றுக் கொண்டு சென்றார்.

வழியில் வேலி யென்பாள் ஒருத்தி ஒரு வீடு கட்டிக்கொண்டிருந்தாள். அவ்வீட்டின் ஒரு பக்கத்துச் சுவர் ஒரு பேயினுடைய தொல்லையால் எத்தனை முறை வைத்தாலும் இடிந்து விழுந்து கொண்டேயிருந்தது. அச்சுவர் அந்தப் பக்கம் செல்லும் ஒவ்வொருவருக்கும் வேலை கொடுப்பதாக விருந்தது. பசியோடு அவ்வூரிற் சென்றுகொண்டிருந்த கம்பர், அந்தச் சுவர் வைக்கும் வேலையைத் தொடங்கினர். கம்பர் வைக்க வைக்க அந்தச் சுவர் இடிந்து இடிந்து விழுந்துகொண்டே யிருந்தது. அதைக் கண்ட கம்பர்,

'மற்கொண்ட திண்புயத்தான் மாநகர்விட் டிங்குவந்தேன்
சொற்கொண்ட பாவின் சுவையறிவார் ஈங்கில்லையே
விற்கொண்ட வாணுதலாள் வேலி தருங்கூலி
நெற்கொண்டு போமளவும் நில்லாய் நெடுஞ்சுவரே'

என்று ஒரு செய்யுளைப் பாடினர். சுவர் நிலைத்து நின்றது. கம்பர் வேலியை அழைத்துச் சுவரைக் காட்டினர். சுவர் நிலைத்து நிற்பதைக் கண்டு மகிழ்ந்த வேலி, அச்சுவர் வைத்தலுக்குள்ள கூலியான குறுணி நெல்லையும் கொடுத்தாள். அவர் நெல்லைப் பெற்றுக் கொண்டு போகத்தொடங்கியவுடன் மீண்டும் சுவர் இடிந்து விழுந்தது. அதனைக் கண்ட வேலி இவ்வறிஞர் மிகப் பெரியார். இவரைக்கொண்டே இச்சுவரை நிலை நிறுத்த வேண்டுமென்று நினைத்துக் கம்பரைப் பல வகையாக வேண்டிக்கொண்டாள். கம்பரும் மன மிரங்கித் தாம் முன்பு பாடிய பாட்டின் இறுதி அடியில், 'நெற்கொண்டு போமளவும்' என்றதை, 'நெற்கொண்டு போனலும்' என்று மாற்றி அமைத்தார். சுவர் என்றும் வீழாத வகையில் நிலைபெற்று நிற்கலாயிற்று அப் புதுமையைக் கண்ட வேலியென்னும் விளங்கிழையாள், கம்பரைப் பலவகையாகப் போற்றிப் பலவகைப் பரிசு களை வழங்கினள். கம்பர் அவைகளையெல்லாம் வறியவர் கட்கு வழங்கி மகிழ்ந்து மேற்கொண்டும் தம் பய ணத்தைத் தொடங்கினர். ஒருநாள் நீண்ட தொலை பயணம் செய்தார். வழியில் உணவொன்றும் கிடைக்க வில்லை. பசியின் கொடுமையோ மிகுதியாக விருந்தது. வழியிலிருந்த ஒரு வணிகனுடைய கடைக்குச் சென்றார். சிறிது அவல் தரும்படி கேட்டார். அப்பிசினனே கம்பரை அறியான். 'விடிந்தது முதல் இதுவரை ஒன்றும் விற்பனையாகவில்லை. முதன் முதலாக எவற் றையும் சும்மா கொடுத்தல் முடியாது. போபோ' என்

ருன். சிறிது தூரம் சென்ருர். ஒரு செக்கான் எள் ளாட்டிக்கொண்டிருந்தான். அவனிடம் சென்று சிறிது பிண்ணுக்குத் தரும்படி கேட்டார். அவனே 'எண் ணெய் கூடிவரவில்லை'யென்று கூறிவிட்டான். பசி யுடன் பின்னுஞ் சிறிது தூரம் சென்ருர். ஆங்கொரு பார்ப்பன வீடு இருந்தது. அங்குச் சென்று நீர் வேட்கைக்குத் தண்ணீர் கேட்டார். அவ்வீட்டுப் பார்ப்பனி 'தண்ணீர் எச்சமாகிவிடும்' என்று சாற்றி விட்டாள். இனி எவரிடமுஞ் சென்று எதுவும் கேட்கக் கூடாது என்னும் எண்ணத்துடன் ஓரிடத்திற் சென்று ஒரு மரத்தின் நிழலிற் களைப்புடன் படுத்திருந்தார். அப்பொழுது பக்கத்து நிலத்தில் ஏருழுதுகொண்டிருந்த வேளாளன் ஒருவன் ஏரை நிறுத்திவிட்டுப் பழஞ்சோ றுண்ண வந்தான். அவன் கம்பர் பசித்துப் படுத்திருக்கு மிடத்திற்கு வந்து பார்த்தான். பசியால் களைத்திருப்பது தெரிந்தது. யாரோ வழிப்போக்கன் என்று எண்ணி ஞன். அவன் கம்பரை யணுகித், 'தாங்கள் பசியோ டிருப்பதாகத் தெரிகிறதே; சிறிது பழஞ்சோறு சாப்பிடு கிறீர்களா?' என்று அன்பொழுகக் கேட்டான். கம்பர் 'அப்படியே' என்ருர். உடனே வேளாளன் அவரை முன்பு சாப்பிடச் செய்து பின்பு தானும் சாப்பிட்டான். அவன் செய்கை கம்பருக்கு வியப்பை விளைவித்தது. அவர்,

'செட்டிமக்கள் வாசல்வழிச் செல்லோமோ செக்காரப்
பொட்டிமக்கள் வாசல்வழிப் போகோமே—முட்டிபுகும்
பார்ப்பா ரகத்தையெட்டிப் பாரோமே எந்நாளும்
காப்பாரே வேளாளர் காண்'

என்று ஒரு பாட்டைப் புனைந்தார். வேளாளன் அவர் ஓர் அறிஞரென்று அறிந்துகொண்டு, தன்னுடைய

வீட்டிற்கு அழைத்துச் சென்று நன்கு போற்றி அனுப்பினுன்.

பின்பு கம்பர், மதுரையை யடைந்து பாண்டியன் அவையில் அமர்ந்து இராமாயணச் சொற்பொழிவுகள் செய்துகொண்டிருந்தார். நாட் பல சென்றன. சோழ மன்னன் பேரவை அழகிழந்து விளங்கிற்று. அது திங்களில்லாத விண்போலவும், தாமரையற்ற குளம் போலவும், கண்ணற்ற முகம்போலவும் விளங்கிற்று. எனவே, சோழன் கம்பரை எங்கிருந்தாலும் அழைத்து வந்து சேர்க்கவேண்டுமென்று பல பக்கங்களிலும் ஆளனுப்பித் தேடினுன். அவர் பாண்டியன் அவையில் அமர்ந்திருப்பதாக அறிந்தான். சடையப்பவள்ளலின் இளவலாகிய இணையாரமார்பன் என்பவரை அனுப்பி அழைத்துவரச் செய்தான் கம்பரும் வந்துசேர்ந்தார். அரசரும் அறிஞரும் பண்டுபோல் அளவளாவி மகிழ்ந்தனர்.

ஒரு சமயம் கம்பருடைய வண்ணுன் சீராமன் என்பவன் கம்பருடைய ஆடையை மிகத் தூய்மையாக வெளுத்துக் கொடுத்தான். அவன் ஆடையை வெளுத்திருந்த அழகு கம்பருடைய உள்ளத்தைக் கவர்ந்தது. அவ்வாடையின் வெண்மை நிறம் கங்கையையும் கலைமகளையும் சங்கையும் கம்பருக்கு நினைவூட்டிற்று;

'சிரம்பார்த்தான் ஈசனயன் தேவி தனைப்பார்த்தான்
கரம்பார்த்தான் செங்கமலக் கண்ணன்—உரஞ்சேர்
மலைவெளுத்த திண்புயத்து வண்ணுன்சீ ராமன்
கலைவெளுத்த நேர்த்திதனைக் கண்டு'

என்று அவ்வண்ணுனைப் புகழ்ந்து பாடி அவனுக்கு மகிழ்ச்சியை விளைவித்தார். ஒருகால் கம்பர் சிதம்பரத்திற்கு வந்தபோது அங்கிருந்த நாவிதன் ஒருவன் கம்ப

ருக்கு மிக நேர்த்தியாக மயிர் கழித்துவிட்டான். அம் மயிர்வினைஞனுடைய செயலையும் கம்பர் வியந்து,

'ஆரார் தலைவணங்கார் ஆரார்தாங் கையெடார்
ஆரார்தாம் சத்திரத்தில் ஆராதார்—சீராரும்
தென்புலியூர் மேவும் சிவனருள்சேர் அம்பட்டத்
தம்பிபுகான் வாசலிலே தான்'

என்றொரு செய்யுளைப் பாடி அந்நாவிதனையும் களிப் படையச் செய்தார்.

ஏகம்பவாணர் என்பவர் கம்பரிடம் கல்வி கற்றுக் கம்பருடைய மாணுக்கராக விளங்கினுர். இந்த ஏகம்ப வாணர் கல்விச் செல்வத்துடன் பொருட் செல்வமும் மிகுதியாகப் படைத்தவர். இவர் ஒரு நாள் நள்ளிர வில் கம்பர் வீட்டிற்குச் சென்று கதவைத் தட்டினுர். அப்போது கம்பர் உள்ளிருந்தபடியே, 'யார்?' என்று கேட்டார். ஏகம்பவாணர் 'கம்பருடைய அடிமை' என்று விடையளித்தார். கம்பருக்குப் பதில் கூறுவது யாரென்று நன்கு விளங்கவில்லை. கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்து பார்த்தார். ஏகம்பவாண ரைக் கண்டார். ஏகம்பவாணருடைய பெருந்தன்மை கம்பர் மனத்திலே மிகுந்த மகிழ்ச்சியை விளைத்தது.

'பாண்டியனைப் பேர்மாற்றிப் பாணர்க் கரசளித்த
ஆண்டகையென் றுன்னை அறியேனே—நீண்டெழுந்த
கார்மாற்றுஞ் செங்கைக் கடகரிவா ணுஉனது
பேர்மாற் றுவதரிதோ பேசு'

என்னும் பாடலைக் கூறி ஏகம்பவாணரை இன்புறுத் தினுர்.

கம்பர் ஒரு முறை கொங்கு மண்டலத்திற்குச் சென்றார். அம்மண்டலத்தார் கம்பரைத் தக்கபடி

போற்றவில்லை. அந்நாட்டாருடைய செயல் கம்பருக்குச் சீற்றத்தை யுண்டாக்கிற்று. உடனே ;

‘ நீரெலாஞ் சேற்று நாற்றம் நிலமெலாங் கல்லும் முள்ளும்
ஊரெலாம் பட்டிதொட்டி உண்பதோ கம்பஞ் சோறு
பேரெலாம் பொம்மன் திம்மன் பெண்களோ நாயும் பேயும்
காருலாங் கொங்கு நாட்டைக் கனவினும் நினைக் கொணுதே ’

என்று இகழ்ந்து பாடிச்சென்ருர்.

கம்பருக்கு அம்பிகாபதி என்று அருமைப் புதல்வனொருவன் இருந்தான். அவனும் கம்பரைப்போல் கல்வியறிவிற் சிறந்தவன். அழகில் மிக்கவன். ஊழின் வலியால் அம்பிகாபதிக்கும் அரசன் மகளுக்குங் காதலுண்டாயிற்று. இருவரும் ஒருவரையொருவர் மிகுதியும் காதலித்தனர். இச்செய்தியை அறிந்த அரசன் கம்பரிடம் கூறினன். கம்பரோ ஒருநாளும் அப்படியிருக்காது என்று மறுத்தார். அரசனே அதனை மெய்ப்பிப்பதாகக் கூறி அரண்மனையில் ஒரு விருந்து வைத்துத் தன் மகளை அழைத்து அனைவருக்கும் உணவு பரிமாறும்படி கட்டளையிட்டான். அவ்வாறே அவளும் பரிமாறுதற்கு வந்தாள். அம்பிகாபதியின் ஆவல் அடக்க அடங்காதாயிற்று. அவன்,

‘ இட்டடி நோவ எடுத்தடி கொப்புளிக்க
வட்டில் சுமந்து மருங்கசைய ’

என்ருன்.

அவன் பாட்டை முடிப்பதற்குள் கம்பர் ஆபத்து வந்ததென்று எண்ணியவராய்க் கலைமகளை வேண்டிக் கொண்டு,

‘ கொட்டிக், கிழங்கோ கிழங்கென்று கூறுவாள் நாவில்
வழங்கோசை வையம் பெறும் ’

என்றுகூறிப் பாட்டினை முடித்தார். சோழன் சினத்துடன் அம்பிகாபதியையும் கம்பரையும் நோக்கினன். மற்றிருந்தவர்களும் திடுக்கிட்டு விழித்தனர். தெருவில் ஒரு பெண் கொட்டிக்கிழங்கு விற்றுக்கொண்டு செல்கிருள். அவளை நோக்கித்தான் இப்பாடலைப் பாடினேம் என்றனர் இருவரும். அனைவரும் வெளியேசென்று பார்த்தனர். அன்பனைக் காக்க விரும்பிய கலைமகள் ஒரு பெண்போல் கொட்டிக்கிழங்கு விற்றுக்கொண்டு சென்றதைக் கண்டனர். அரசன் மற்றும் பலவழிகளால் அம்பிகாபதிக்கும் தன் மகளுக்கும் ஏற்பட்டுள்ள காதலைப் பலருக்கும் வெளிப்படையாக விளக்கிக்காட்டினன். பின்னர்க் கடவுளை நோக்கி ஒரு வணக்க நூல் நூறு பாடல்களில் சிற்றின்பச்செய்தி வராமல் பாடினல் அம்பிகாபதியின் குற்றத்தைப் பொறுப்பதாக அரசன் கூறினன். தொண்ணூற்றென்பது பாடல்கள் பாடியும் ஒரு பாடலில் அம்பிகாபதிக்கு ஆபத்து நேர்ந்து விட்டது. அம்பிகாபதியைக் கொலைசெய்து விடுமாறு அரசன் கட்டளை பிறப்பித்துவிட்டான். அரசன் கட்டளையும் நிறைவேற்றப்பட்டுவிட்டது. அம்பிகாபதிக்கு நேர்ந்த ஆபத்தைக்கண்டு மனம் வருந்திய அரசன் மகளும் அதே ஏக்கத்தால் வருந்தி உயிர்விட்டாள். அரசன் அறிஞர் இருவருமே மக்கட் பிரிவால் வருந்தியிருந்தனர். ஒருநாள் சோழன் கம்பரை வெறுத்தான் கம்பர்,

‘மன்னவனும் நீயோ வளநாடும் உன்னதோ
உன்னையறிந் தோதமிழை ஓதினேன்—என்னை
விருந்தேற்றுக் கொள்ளாத வேந்துண்டோ வுண்டோ
குரங்கேற்றுக் கொள்ளாத கொம்பு’

என்னுஞ் செய்யுளைப்பாடிச் சோழநாட்டைவிட்டு வெளியேறிச் சென்றுவிட்டார்.

சென்றவர் சேரநாட்டை அடைந்து சேரனுடைய ஆதரவில் இருந்தார். (ஐதராபாத்துக் அருகில் உள்ள ஓரங்கநாட்டை யாண்டுகொண்டிருந்த பிரதாபருத்திரன் ஆதரவில் என்றும் சில வரலாறுகளில் காணப்படுகின்றன.) அவ்வரசன் கம்பர்மாட்டு மிகுந்த அன்பும் ஆதரவும் காட்டினன். கம்பர் சென்றது முதல் அங்கு வழக்கமாக இருந்த புலவர்களுக்குக் கம்பர் இடத்தில் அழுக்காறுண்டாயிற்று. அரசனுக்குக் கம்பரிடத்துள்ள அன்பையும் ஆதரவையும் குறைப்பதற்கு வழி தேடினர். அவர்கள் சேரனுடைய மயிர்வினைஞனை யழைத்து 'நீ இப்போது புதிதாக நமது இராச சபைக்கு வந்துள்ள கம்பர் என்னும் அறிஞனை உன் உடன்பிறந்தவனாகக் கூறி அரசன் முன் வெளிப்படையாக உறவு கொண்டாடவேண்டும். அவ்வாறு நீ செய்தால் உனக்கு ஏராளமாகப் பொருள் தருகிறோம்' என்றுகூறி முன்னதாகவும் சிறிது பொருள் கொடுத்தனர்.

ஒரு நாள் அரசன் அவையில் அனைவரும் கூடியிருக்கையிற் அம் மயிர் வினைஞன் அவைக்கு வந்து கம்பரைக் கட்டித்தழுவிக்கொண்டு, 'என்னை விட்டு விட்டுச் சிறுபிள்ளைக் காலத்தில் கடல்கடந்து சென்ற நீ எப்பொழுது வந்தாய்?' என்று கூறிப் புலம்பினன். கம்பர் ஏதோ சூழ்ச்சி நடந்திருக்கிறதென்று எண்ணியவராய்த் தாமும் அவனை ஒப்புக்குக் கட்டிக்கொண்டு அழுதார். சேரன் ஒன்றும் விளங்காமல் விழித்தான். அப்போது நாவிதன் அரசனைப் பார்த்து, 'இவர் என்னுடன் பிறந்தவர்; குழந்தைக் காலத்திலேயே என்னை விட்டுவிட்டுக் கடல்கடந்து சென்றுவிட்டார். இப்

போதுதான் வந்திருக்கிறார் என்று கூறினன். அரசன் கம்பரைப் பார்த்தான். கம்பரும் உண்மைதான் என்றார். ஒருநாள் கம்பர் கலைமகளை வணங்கி அவ ருடைய காற்சிலம்பொன்றை வாங்கிக்கொண்டு சேர னுடைய அவைக்கு வந்தார். அவர் தம்முடைய கையிலிருந்த சிலம்பினை அரசனிடம் கொடுத்து, இந்தச் சிலம்பு எங்களுடைய முன்னோர் தேடியது. இது வரைப் பாகம் பிரிக்காமல் அப்படியே இருந்தது. இப் போதுதான் பிரித்து ஆளுக்கொன்றாக எடுத்துக்கொண் டோம். இச்சிலம்பு அரசியார் அணிவதற்கே தக்க தாதலின் தங்களிடத்தில் சேர்ப்பித்தேன் என்றார். உடனே அரசன் மயிர்வினைஞனையழைத்து, 'உன்னிட முள்ள சிலம்பையும் கொண்டு வா' என்று கட்டளை யிட்டான். அம்மயிர்வினைஞனோ என்னிடம் ஒன்று மில்லை யென்றான். அரசன் கம்பரைப் பார்த்தான். கம்பர், 'இவன் மிகவும் கையழுத்தக்காரன். தகுந்தபடி வளாசினால்தான் தருவான்' என்றார். உடனே அரசன் அவனுக்குத் தக்கபடி கொடுக்கவேண்டியவைகளைக் கொடுத்து அந்தச் சிலம்பையும் வாங்குங்கள் என்றான். உடனே சேவகர்கள் சவுக்குக்கொண்டு அடித்து 'உடனே மற்றைச் சிலம்பையும் கொண்டுவா' என்றனர். அதற்கு மயிர்வினைஞன் 'என்னை அரசனிடம் கொண்டு செல்லுங்கள்; உண்மையை உரைக்கிறேன்' என்றான். அப்படியே அரசன் முன்பு கொண்டுசென்றனர். அம் மயிர்வினைஞன், "அந்த அறிஞர் என்னுடன் பிறந்தவர் அல்லர். அவரை எனக்குத் தெரியாது. இந்த அறி ஞர்கள் தாம் ஏதோ காரணத்திற்காக எனக்குப் பொருள் கொடுத்து அவரை என் உடன் பிறந்தவ ரென்று கூறச் சொல்லினர். அவர்களோடு சேர்ந்தமை

யால்தான் எனக்கு இந்தத் தொல்லை வந்தது'' என்று உள்ளதை உள்ளவாறு உரைத்துவிட்டான். சேரன் வியந்து கம்பரை நோக்கினன். அவையிலிருந்த அறிஞர்க ளெல்லாரும் நாணித்தலை கவிழ்ந்தனர். சேரன் "தங்கட்கு இந்தச் சிலம்பு எப்படிக் கிடைத்தது? கண்ணைப் பறிக்கும் வேலைப்பாடுகள்மைந்து கடவுட்டன்மையோடு விளங்குகின்றதே'' என்றான். கம்பர் நடந்ததை உரைத் தார். சேரன் கம்பருடைய தெய்வத் தன்மையை எண்ணி வியந்திருக்கும்போது அவையின் ஒரு மூலையில் ஒரு காற் சிலம்பொலி கேட்டது. 'எங்கடா கம்பா சிலம்பு' என்ற ஒலியும் எழுந்தது. மறுகணம் அரசன் கையிலிருந்த சிலம்பு மறைந்துவிட்டது. அரசன் மிகுந்த வியப்படைந்தான். அது முதல் கம்பர் பெருமை பின்னும் பன்மடங்கு மிகுதியாயிற்று. அவர் கம்பர் என்னும் செய்தியும், சேரனுக்கு அப்போதுதான் தெரிந்தது. முன்னைவிடப் பன்மடங்கு கம்பருக்கு வழிபாடும் சிறப்பும் உண்டாயின.

நீண்டநாள் வரையில் கம்பரின் இருப்பிடம் சோழ னுக்குத் தெரியாமல் வருந்திக்கொண்டிருந்தான். இறு தியில் சேரனிடத்தில் இருக்கிறார் என்று தெரிய லானன். உடனே புறப்பட்டு வரவேண்டுமென்று தூது போக்கினன். கம்பரும் செல்லுதற்கு அவாக் கொண்டார். செய்தியைச் சேரனுக்கு அறிவித்தார். அவன் அவரைப் பிரிய மனமற்றவனயிருந்தான். ஆயினும் ஒருவாறு கம்பருக்குச் செலவு கொடுத்து யானை குதிரை முதலிய பரிசுகளும் வழங்கிச் சிறப்புடன் அனுப்பினன். கம்பர் சோழநாட்டை யடைந்தார். சோழனும் தக்க மதிப்புடன் வரவேற்றான். சோழனது அவையில் கம்பருக்கு முன்னிலும் பன்மடங்கு மிகுதி யான சிறப்புக்கள் நடைபெற்றன.

கம்பர் முன்பு சோழனைவிட்டுப் பிரிந்து செல்லும் போது, 'நான் உன்னிலும் சிறந்த அரசர்களையெல்லாம் எனக்குக் கீழ்ப்படிந்தவர்களாகச் செய்வேன். இனி ஒருகால் உன்னிடம் திரும்ப வருமாறு நேர்ந்தால் உன்னைப்போன்ற ஓர் அரசன் எனக்கு அடைப்பக் காரனாக வரத்தக்க நிலைமையுடன் உன்னிடம் வருவேன்' என்று கூறியிருந்தார். இச்செய்தியைக் கம்பர் சேர னிடம் தெரிவித்து நான் விரும்பும்போது வந்து சிறிது நேரம் என்னைச் சிறப்பித்து வரவேண்டும் என்றும் உடன்பாடு பெற்றிருந்தார். இப்போது சோழன் அவையிலிருக்கும்போது சோழன் கம்பரைப் பார்த்து, 'நீர் முந்தி என்னிடம் ஓர் அரசனை அடைப்பக் காரனாக்கிக் கொண்டு வருவேன் என்று சொல்லிச் சென்றீரே அம்மொழி என்ன வாயிற்று?' என்று கேட்டான். உடனே கம்பர் 'அஃது இன்னும் எட்டு நாளில் தெரியவரும்' என்று அரசனுக்குக் கூறிவிட்டுச் சேரனுக்கும் "இப்போது வந்து சிறிது நேரம் தங்கி என்னைச் சிறப்புப்படுத்திச் செல்லவேண்டுமென்று ஓலை போக்கினார். ஓலையைக் கண்டவுடனே சேரனும் கோலம் பூண்டு சோழனுடைய அவைக்கு வந்து கம்பருக்கு வெற்றிலை பாக்கு மடித்துக்கொண்டிருந் தான். இதனையுணர்ந்த சிலர் சோழனுக்குக் கடைக் கண் குறியாகத் தெரிவித்தனர். கம்பர் உடனே சேரனை அனுப்பிவிட்டார். கம்பர் தாம் கூறியதை நிறைவேற்றி விட்டதை யறிந்த சோழன் அவரிடத்தில் மிகுந்த மதிப் புக்காட்டினான். சேரன் மடித்துக் கொடுத்த பாக்கு வெற்றிலையை அவர் கைவிரல்களில் அடுக்கிவைத்துக் கொண்டிருந்தார். அதனை ஏன் அவர் வாயிலிட்டுக் கொள்ளவில்லை யென்று கேட்டபோது "உன்னைப்

போன்ற ஓர் அரசன் எனக்கு அடைப்பக்காரனாக வந்து பாக்கு வெற்றிலை மடித்துக்கொடுத்தாலும் அதனை நான் வாயிற் போட்டுக்கொள்வது தகுதியாகுமா? ஆணவத்தால் இறுமாந்து விடலாமா?'' என்று பதிலளித்தார். ''ஏன் சேரனை உடனே அனுப்பிவிட்டீர்?'' என்றான் சோழன். அதற்குக் கம்பர், ''படைகளின்றித் தனியே வந்துள்ளபோது நீ அவனைச் சிறைசெய்து விடுதலும் கூடுமல்லவா? அதனால்தான் குறிப்புக் காட்டிப் போகச்செய்துவிட்டேன்'' என்றார்.

நாட்கள் பல சென்றன. சேரன் கம்பருக்கு அடைப்பக்காரனாக வந்தது முதல் சோழன் கம்பரிடத்தில் மிகவும் அஞ்சிக்கொண்டிருந்தான். கம்பர் சொற் கேட்டுச் சேரன் தன்மீது படையெடுத்து வந்தாலும் வரலாமல்லவா என்னும் அச்சம் சோழனுக்கு மிகுந்து வந்தது. மீண்டும் பழையபடி ஒருவருக்கொருவர் வெறுப்பு உண்டாயிற்று. ஒருநாள் சோழனுடைய இளைய புதல்வன் காட்டிற்குச் சென்று சிறு வேட்டையாடினான். அனைவரையும் விட்டுப்பிரிந்து தனியனானான். அப்போது ஒரு காட்டானை அவனைத் துரத்திக் கொண்டு வந்தது. அவன் விரைந்து ஓடிவந்தான். வழியில் கம்பர் வீடிருந்தது. 'கம்பரே! காட்டானை துரத்தி வருகிறது' என்றான். தம் புதல்வனை இழந்த வருத்தத்தால் அப்போது அவர் வருந்திக்கொண்டிருந்தார். சோழன் மகன் அவ்வாறு கூறிக்கொண்டு வந்தது கம்பருக்கு மிகுந்த சீற்றத்தை யுண்டாக்கிற்று. 'காட்டானை விட்டுவிட்டால் பாட்டானை விட்டு விடுமோ' என்று கூறிக்கொண்டே எழுத்தாணியை ஓங்கி அச் சிறுவனைக் குத்திக் கொன்றார்.

தன்மகன் இறந்த செய்தி சோழனுக்குத் தெரிந்தது. இனி நமக்கும் ஆபத்துத்தான் என்றறிந்த சோழன் கம்பரைக் கொல்லுமாறு ஒரு யானையைக் கம்பர் அரண் மனைப் பக்கம் வரும்சமயம் பார்த்து அவர் மீது ஏவினான். அந்த யானையைக் கண்ட கம்பர்,

வெங்கண் சிவந்து வெடிவால் முறுக்கி வெகுண்டெழுந்தென்
அங்கம் பிளக்க வருங்களி றேஅன் றிரணியனைப்
பங்கம் படப்பட வள்ளுகி ரால்உரம் பற்றியுண்ட
சிங்க மிருப்பது காண்கெடு வாயென்றன் சிந்தையுள்ளே

என்னும் பாடலைப் பாடி நரசிங்கப் பெருமானைப் போற்றினார். அவ்வளவில் அந்த யானை கீழே விழுந் திறந்தது. அது கண்ட சோழன் இனிக் கணமும் தாமதிக்கக்கூடாது என்று வில்லையும் அம்பையும் எடுத்து, ஓரம்பைக் கம்பர் மார்பை நோக்கி யெய்தான். அவ்வம்பு கம்பர் மார்பை ஊடுருவிச் சென்றது. அப்போது,

வில்லம்பு சொல்லம்பு மேதினியில் இரண்டுண்டு
வில்லம்பிற் சொல்லம்பே மேலதிகம்—வில்லம்பு
பட்டதடா என்மார்பில் பார்வேந்தா நின்குலத்தைச்
சுட்டதடா என்வாயின் சொல்

என்னும் பாட்டையும்,

ஆன்பாலுந் தேனும் அரம்பைமுதல் முக்கனியும்
தேம்பாய வுண்டு தெவிட்டுமனம்—தீம்பாய்
மறக்குமா வெண்ணெய் வருசடையா கம்பன்
இறக்கும்போ தாயும் இனி

என்று சடையப்பர் பெருமையையும் நினைத்துப் பாடிக் கொண்டே உடல் நீத்தார்.

---

## ௯. புகழேந்திப் புலவர்

"வெண்பாவிற் புகழேந்தி" என்று புகழ்ந்தோதப் பெற்றவர் புகழேந்திப் புலவர். அவர் தொண்டை நாட்டுப் பாலாற்றங் கரையிலுள்ள பொற்களந்தை என்னும் ஊரிற் பிறந்தவர் என்று வரலாறுகள் வழங்குவதுடன் பாண்டி நாட்டிற் பிறந்தவரென்றும் வரலாறுகள் வழங்குகின்றன. அவர் எந்த நாட்டிற் பிறந்தவராயினும் வேளாண் குலத்திலே பிறந்தவர் என்பதுமட்டுந் தேற்றம். அவர் இளமையிலேயே கல்வி கேள்விகளிற் சிறந்து தெள்ளிய புலமையுடையவராக விளங்கினார். புகழேந்தியார் அறிவாற்றலிற் சிறந்து புலமைநலங் கனிந்து திகழ்தலைக் கண்ட சிலர், அவர் அரசனவைக்களத்தை யடைந்தால் மிக மேன்மையாக விளங்கலாமென்று உரைத்தனர். அவர்கள் கூறியது அறிஞருக்குந் தக்கதே என்று தோன்றினமையின், பாண்டி நாட்டையடைந்து வரகுண பாண்டிய மன்னனது அவைக்களத்திலே தலைமைப் புலவராக இனிதமர்ந்திருந்தார். அவருடைய அறிவுப் பெருக்கை நன்குணர்ந்த பாண்டியன் பலவகைச் சிறப்புக்களும் செய்து போற்றி வைத்திருந்தான். தன்னுடைய அருமைத் திருமகளுக்கும் புகழேந்திப் புலவரைக் கொண்டு செந்தமிழ்ப் பயிற்சியை நன்கு உண்டாக்கச் செய்தான். அப்பெண்ணும் புகழேந்தியாருடைய முயற்சியால் அறிவு சிறந்து விளங்கினாள்.

அந்நாளில் விக்கிரம சோழன் சோழமண்டலத்தை அரசாட்சி செய்துகொண்டிருந்தான். அவன், பாண்டியன் மகள் புகழேந்தியாருடைய முயற்சியால் அறிவிற் சிறந்து திகழ்தலை யறிந்து, ஒட்டக்கூத்தரின் பயிற்சியால் கல்வியிற் சிறந்து விளங்கும் தன்னுடைய அருமைத்

திருமகன் குமார குலோத்துங்கனுக்கு அவளைத் திரு மணஞ்செய்ய எண்ணியிருந்தான். அவ்வெண்ணம் நிறைவேறுதற்குள் அவன் விண்ணுடைய நேர்ந்தது. இறுதிக்காலத்தில் தன்னுடைய எண்ணத்தைக் கூத்த ரிடத்திலே தெரிவித்து நிறைவேற்றுமாறு வேண்டிக் கொண்டிருந்தான். விக்கிரமசோழன் இறந்தபின் ஒட்டக்கூத்தர் அரசனுடைய எண்ணத்தை நிறை வேற்றக் கருதினர். மதுரைமாநகர் சென்றார். வரகுண பாண்டியனைக் கண்டார். குமாரகுலோத்துங்கன் கல்வி யறிவில் மேம்பட்டு விளங்குதலைக் கூறி, அவனுடைய மகளைத் தம்முடைய மாணவனாகிய குமாரகுலோத் துங்கனுக்குத் திருமணஞ் செய்துகொடுக்கவேண்டு மென்று கூறினர். பாண்டியன் அவருடைய பேச்சுத் திறமை முதலியவற்றை நன்கறிய விரும்பினன். பாண்டியர் பெண்களை மணக்கத்தக்க பெருமை சோழர் களுக்குள்ளதோ என்று வினவினன். ஒட்டக்கூத்தர் மட்டாகப் பதில் கூறாமல் பெருமிதத்துடன் பேசலானார்.

"சோழ மன்னர்கள் ஏறும் கோரம் என்னும் குதிரைகளுக்குப் பாண்டிய மன்னர்கள் ஏறும் கன வட்டக் குதிரைகள் ஒப்பாகுமா? காவிரி யாற்றிற்கு வையையாறு ஒப்பாகுமா? சோழர்கள் அணியும் ஆத்தி மாலைக்குப் பாண்டியர்கள் அணியும் வேப்பமாலை நிக ராகுமா? உலகத்திருளை யொழிப்பதாயுள்ள ஞாயிற் றுக்குத் தேய்ந்து வளர்ந்து திரியும் திங்கள் ஈடாகுமா? வீரர்கட்கெல்லாம் வீரராக விளங்குபவர்கள் சோழர் களா? பாண்டியர்களா? சோழர்களுடைய புலிக் கொடிக்குப் பாண்டியர்களுடைய கயற்கொடி முன் னிற்குமா? 'ஊரெனப்படுவது உறையூர்' என்று புகழப்பெறும் உறையூருக்குப் பாண்டியர்களுடைய

கொற்கை எதிர்நிற்குமா? ஆற்றுநலஞ் சிறந்த சோழ நாட்டிற்கு அவ்வளமில்லாத பாண்டிய நாடோ மிக்க தாகும்? எவ்வகையாகப் பார்ப்பினும் எமது சோழ நாடும் அதன் அரசர்களுமே மிகச் சிறந்தவர்களாவர்" என்னும் பொருளை யமைத்து,

"கோரத்துக் கொப்போ கனவட்டம் அம்மானை
கூறுவதும் காவிரிக்கு வைகையோ அம்மானை
ஆருக்கு வேம்புநிகர் ஆகுமோ அம்மானை
ஆதித்த னுக்குநிகர் அம்புலியோ அம்மானை
வீரர்க்குள் வீரனொரு மீனவனே அம்மானை
வெற்றிப் புலிக்கொடிக்கு மீன்கொடியோ அம்மானை
ஊருக் குறந்தைநிகர் கொற்கையோ அம்மானை
ஒக்குமோ சோனாட்டைப் பாண்டிநா டம்மானை"

என்றொரு பாட்டைப் பாடினர். அப்போது அங் கிருந்த புலவர்மணியாகிய புகழேந்தியாருடைய உள்ளங் கொதித்தது. கூத்தர் கூற்றை அவர் முழுவதும் மறுத்து,

"முனிவரிற் சிறந்த அகத்திய முனிவர் செந்தமிழை வளர்த்தது பாண்டி நாட்டுப் பொதிய மலையிலிருந்தா அல்லது சோனாட்டு நேரி மலையிலிருந்தா? சிவபிரான் அறுபத்துநான்கு திருவிளையாடல்களைப் புரிந்தது மதுரையிலா உறையூரிலா? திருமால் பிறப்பெடுத்தது மீனாகவா புலியாகவா? சிவன் முடியில் சிவணியிருப் பது செங்கதிர் ஞாயிறா திங்களா? திருஞானசம்பந்தப் பிள்ளையார் ஏடு எதிரேறியது வைகையிலா காவிரி யிலா? பேய்க்குப் பகையாக நின்று அதனைத் தடுப்பது ஆத்திமாலையா வேப்பமாலையா? கடல் வணங்கியது சோழன் காலையா பாண்டியன் காலையா? பாண்டியர் பெருமையைக் கூறவும் முடியுமோ!" எனும் பொருளை யமைத்து,

"ஒருமுனிவன் நேரியிலோ உரைதெளித்த தம்மானை
ஒப்பரிய திருவிளையாட் டுறந்தையிலோ அம்மானை
திருநெடுமால் அவதாரம் சிறுபுலியோ அம்மானை
சிவன்முடியி லேறுவதும் செங்கதிரோ அம்மானை
கரையெதிரல் காவிரியோ வைகையோ அம்மானை
கடிப்பகைக்குத் தாதகியங் கண்ணியோ அம்மானை
பரவைபணிந் ததும் சோழன் பதந்தனையோ அம்மானை
பாண்டியனார் பராக்கிரமம் பகர்வரிதே அம்மானை"

என்னும் பாடலைப் பாடிப் பாண்டியர் பெருமையை விளக்கினார். ஒட்டக்கூத்தர் மேலும் சோழருடைய பெருமையை விளக்க நினைத்து,

"வென்றி வளவன் விறல்வேந்தர் தம்பிரான்
என்றும் முதுகிற் கிடான்கவசம்"

என்று பாடிய அளவிற் புகழேந்திப் புலவர்,

"—தென்றும்
வெறியார் தொடைகமழும் மீனவர்கோன் கைவேல்
எறியான் புறங்கொடுக்கின் என்று"

என ஒட்டக்கூத்தர் பாட்டை ஒட்டிப் பாடியே கூத்தர் கூற்றை மறுத்தார். பின்னர்த் திருமணப்பேச்சு மீண்டும் நடந்தது. ஒட்டக்கூத்தர் இழித்துரைத்ததைப் பொருட்படுத்தாமல், மகட்கொடைக்கு உடன்படவேண்டுமென்று கேட்டுக்கொண்டார் புகழேந்திப் புலவர். பாண்டியனும் திருமணத்திற்கு உடன்பட்டான். நாளுங் குறிக்கப்பெற்றது. கூத்தர் சோணாடடைந்து பாண்டியனுடைய உடன்பாட்டைக் குலோத்துங்கனுக் கறிவித்தார். குமாரகுலோத்துங்கன் ஒட்டக்கூத்தர்பால் சின்னாட்களுக்கு அரசியலை ஒப்படைத்துவிட்டு வேண்டியோருடன் மதுரையடைந்தான். திருமணமும் இனிது நிகழ்ந்தது. பாண்டியன் தன் மகட்குப் பலவகைச் சிறப்புக்க

ளளித்து மணாளனுடன் அனுப்பினான். மகளின் வேண்டுகோளின்படி அவளுடைய ஆசிரியரும் தனது அவைக்களத் தலைமைப்புலவருமாகிய புகழேந்தி யாரையும் உடன் அனுப்பினான். எல்லோரும் சோழநா டடைந்து இனிதிருந்தனர்.

புகழேந்தியாரைக் கண்ட ஒட்டக்கூத்தருக்கு அவர் பால் அழுக்காறுண்டாயிற்று. அவருடைய கல்விப் பெருமை தம்முடைய புலமைக்கு மிகுந்ததாகையால் தமக்கு இனிமேல் சிறப்புக் குன்றக்கூடும் என்று அவர் பெரிதும் அஞ்சினார். குலோத்துங்கன்பால் பாண்டியன் அவைக்களத்தில் நிகழ்ந்தவைகளையெல்லாம் விரித் துரைத்தார். அவர், தன்னுடைய தலைவியின் ஆசிரிய ராக இருத்தலையெண்ணிய குலோத்துங்கன் கூத்தர் கூறியவற்றைக்கேட்டு யாதும் கூறாதிருந்தான். புக ழேந்தியாருக்கு இடர் இழைத்தற்குக் கூத்தர் தக்க காலத்தை எதிர்பார்த்துக்கொண்டிருந்தார். அரசன் அதிகாரத்தைத் தம்பால் ஒப்புவிக்கும் அற்றத்தை எதிர் நோக்கியிருந்த அவர் அக்காலம் கிடைத்தபோது புகழேந்தியாரைச் சிறையிலடைத்துவிட்டார். சிறையி லடைத்ததன்றிப் போதிய உணவும் அளிக்காமற் செய்து விட்டார். புகழேந்தியார் அடைக்கப்பட்டிருந்த இடம் பெண்கள் நீரெடுக்கச் செல்லும் வழியில் இருந்தது. அவர் அப்பெண்களை ஏடும் எழுத்தாணியும் கொண்டு வந்து பலகணி வழியாகத் தரச்செய்து, அல்லியரசாணி மாலை, பவழக்கொடிமாலை முதலிய நங்கைப்பாட்டுக்களை யெல்லாம் மங்கையர்க்கு இனிது விளங்கும்படி பாடிக் கொடுத்தார். அப்பாட்டினைப் படித்து மகிழ்ந்த பெண் கள் அவருக்குப் பலவகையான இனிய வுணவுகளை அளித்தனர். புகழேந்தியார் அவைகளை யுண்டு மகிழ்

வுடன் இருந்தார். அவ்வாறிருக்குங் காலத்தில் ஒரு நாள் குலோத்துங்கசோழன் ஒரு சிறப்பை முன்னிட்டு இரவில் திருவீதி உலாப்போந்தான். அப்போது வெண் கொற்றக் குடை நிழல்செய்து நின்றது. சோழன் குலோத்துங்கன் ஒட்டக்கூத்தரைப் பார்த்து, 'அற்ப னுக்கு வாழ்வு வந்தால் அர்த்தராத்திரியில் குடைபிடிப் பான்' என்று உலக வழக்கில் கூறப்படுகிறதே. தேவர் களே யல்லாமல் நான் இரவில் இவ்வாறு குடைபிடித் துச் செல்லலாமா?' என்று கேட்டான். அதற்கு ஒட்டக் கூத்தர் யாதும் பதிலுரையாது இருந்துவிட்டார். அச் சமயம் உலா புகழேந்தியார் சிறையிருந்த இடத்தின் அருகாகச் சென்றது. அரசன் பேசியதைக் கேட்டிருந்த புகழேந்திப்புலவர், அவன் கேள்விக்கு விடையாக,

''அண்டமீ துலவி வாழும் அருந்ததிக் கற்பா ளுன்னைக்
கண்டதா லுவகை பொங்கிக் கற்பழிந் திடுவ ளென்றே
எண்டிசை புரக்கும் வேந்தே இரவினிற் சவிகை நீழல்
கொண்டுமா நடத்து மாறு குலோத்துங்கா நீதி தானே''

என்னும் செய்யுளைப் பாடினர். இப்பாடலைக் கேட்டு மகிழ்ந்த மன்னன் அவ்வாறு பாடியவர் புகழேந்திப் புலவ ரென்பதனை யுணர்ந்து, அவரைச் சிறையினின்றும் நீக்கித் தன்னுடன் சேர்த்துக்கொண்டு சென்ருன். செல்லும்போது ஒட்டக்கூத்தரை நோக்கி, 'இவர் பெரும்புலவ ரல்லரோ' என்று புகழேந்தியாரைச் சுட் டிக் கேட்டான். அதற்குக் கூத்தர்,

''மானிற்கு மோஅந்த வாளரி வேங்கைமுன் வற்றிச்செத்த
கானிற்கு மோவவ் வெரியும் சழல்முன் கனைகடலின்
மீனிற்கு மோவந்த வெங்கட் சுறவின்முன் வீசுபனி
தானிற்கு மோவக் கதிரோ னுதயத்தில் தார்மன்னனே''

என்றொரு பாடலைப் பாடினார். அப்பாடலைக் கேட்ட புகழேந்திப்புலவர் சோழனை நோக்கி, 'இப்பாடலை வெட்டிப்பாடவோ ஒட்டிப்பாடவோ?' என்று கேட்டார். சோழன் தன்னுடைய ஆசிரியரின்மீது வைத்துள்ள அன்பினால் ஒட்டியே பாடுமாறு உரைத்தான் உடனே புகழேந்தியார்,

"மான் அவன் நான் அந்த வாளரி வேங்கையும் வற்றிச்செத்த
கான் அவன் நான் அவ் வெரியும் தழலுங் கனைகடலின்
மீன் அவன் நான் அந்த வெங்கட் சுறவமும் வீசுபனி
தான் அவன் நான் அக் கதிரோ னுதயமுந் தார்மன்னனே."

என்னும் பாடலைப் பாடினார். இதனைக்கேட்ட கூத்தர் நாணிப் பேசாதிருந்தார். சோழன் குலோத்துங்கன் இருவரையும் நண்பர்களாகச் செய்வதற்குப் பல முயற்சிகள் செய்தான். ஆயினும் கூத்தருடைய உள்ளக் கொதிப்பால் அஃது இனிது முடியவில்லை.

சிறிதுகாலஞ் சென்றபின் புகழேந்திப்புலவர் மதுரை செல்ல நினைந்து, அரசனிடமும் தம்முடைய மாணவியாகிய அரசியிடமும் விடைபெற்றுப் பாண்டி நாட்டை நோக்கிப் புறப்பட்டார். புறப்பட்டு வழிக்கொண்டவர் வழியிலுள்ள மள்ளுவநாட்டில் தங்கினார். அந்நாட்டை அப்போது சந்திரன் சுவர்க்கி என்னும் குறுநில மன்னன் ஆட்சிபுரிந்துகொண்டிருந்தான். அவன் புகழேந்திப்புலவரைப்பற்றி முன்னரே கேள்விப்பட்டு அவரைப் பார்த்தற்கு அவாக்கொண்டிருந்தவன். அவன் புகழேந்திப்புலவரைப் பெரிதும் போற்றித் தன்னுடைய நாட்டிலே சின்னாள் தங்கிச்செல்ல வேண்டுமென்று வேண்டிக்கொண்டான். புகழேந்திப் புலவரும் அவனுடைய அன்புடைமைக் கிணங்கி அங்கே சிறிதுநாள் இருந்தார். அப்போது ஒருநாள்

சந்திரன் சுவர்க்கி புகழேந்திப்புலவரைப் பார்த்துப், 'பாரதத்தின் ஒரு கிளைக்கதையாக இருக்கும் நளன் கதையை வெண்பாவில் பாடித் தரவேண்டு'மென்று வேண்டிக்கொண்டான். புகழேந்தியாரும் அவன் விருப்பப்படி நளவெண்பாவை இனிமை ததும்பப்பாடி அவனுடைய அவைக்களத்திலே அரங்கேற்றினார். அவ்வெண்பா எல்லா நலங்களும் இனிதமையப்பெற்றுச் சொன்னோக்கிலும் பொருணோக்கிலும் சிறந்து விளங்கிற்று. அரங்கேற்றி முடிந்தபின் புலவருக்குச் சந்திரன் சுவர்க்கி பெரும் பரிசுகளளித்துச் செய்ய வேண்டிய சிறப்புக்கள் எல்லாவற்றையும் குறைவறச் செய்தான். புகழேந்தியார் பின்னுஞ் சிலநாள் அங்கிருந்தபின் புறப்பட்டு மதுரை யடைந்து பாண்டிய மன்னனைக் கண்டு நடந்தவைகள் முழுவதையும் விரித்துரைத்தார். பாண்டியன் இன்பக் கண்ணீரையும் துன்பக் கண்ணீரையும் ஒருங்கே சொரிந்தான்.

நாட்கள் பல சென்றன. நளவெண்பாவின் நயம் நான்கு பக்கங்களிலும் பரவிற்று. சோழன் மனைவியான பாண்டியன் மகள் நளவெண்பாவின் பெருமையைப்பற்றிக் கேள்விப்பட்டாள். தன்னுடைய ஆசிரியரான நூலாசிரியரின் வாயினாலேயே நளவெண்பாவைக் கேட்டு இன்புற எண்ணினாள். தன் எண்ணத்தைத் தலைவனுக்குத் தெரியப்படுத்தினாள். குலோத்துங்கன் புகழேந்தியாருக்குச் செய்தி யனுப்பினான். சோணாடு செல்வது புகழேந்திப்புலவருக்கு விருப்பமில்லையாயினும், தம்முடைய மாணவியின் எண்ணத்தை நிறைவேற்றுதற்பொருட்டுப் புறப்பட்டுச் சோழநாட்டிற்கு வந்துசேர்ந்தார். மீண்டும் ஒருமுறை குலோத்துங்கன் அவைக்களத்தில் மிகச் சிறப்புடன் அரங்கேற்றுதல்

நிகழ்ந்தது. புலவர் பெருமக்களும் செல்வர்களும் திரண்டிருந்தனர்.

அரங்கேற்றுதலின்போது அங்குக் குழுமியிருந்தோர் அனைவரும் நளவெண்பாவின் சொற்சுவையையும் பொருட் சுவையையும் காதாரக் கேட்டு மனமாரக் களித்துப் புலவரை வாயாரப் புகழ்ந்தனர். ஒட்டக்கூத்தருக்கோ பழம் பகை முறுகிக் கொண்டே நின்றது. குற்றம் சொல்வதற்கு அற்றம் நோக்கியிருந்தார். புகழேந்தியார்,

"மல்லிகையே வெண்சங்கா வண்டூத வான்கருப்பு
வில்லி கணைதெரிந்து மெய்காப்ப—முல்லைமலர்
மென்மாலை தோளசைய மெல்ல நடந்ததே
புன்மாலை யந்திப் பொழுது"

என்னுஞ் செய்யுளைக் கூறிப் பொருள் விரித்துரைத்துக்கொண்டிருந்தார். அப்போது ஒட்டக்கூத்தர் தேனை ஒழுகவிட்டுத் தூசி முதலிய அழுக்குகளைப் பற்றிக்கொள்ளும் பன்னாடையைப்போல, நயங்களைப் பற்றி யொன்றுங் கூறாது ஒரு குற்றத்தைக் கூறத் தொடங்கினார். 'மல்லிகையைச் சங்காகச் சொல்லியது பொருந்தும். வண்டை ஊதுபவனாகச் சொல்லியது பொருந்தாது. சங்கை ஊதுவோன் அடியை வாய்வைத் தூதுதல் முறையேயன்றி நுனியை வாய்வைத் தூதுதல் வழக்கன்று' என்று மறுத்துரைத்தார். புகழேந்திப் புலவர், 'கட்குடியனுக்கு அடியென்றும் நுனியென்றும் வேறுபாடு தெரியுமா?' என்று பதிலிறுத்தார். அவையிலுள்ளோர் புகழேந்தியரை வியந்து புகழ்ந்தனர். கூத்தரோ நாவடங்கி நாணி நின்றார். மேலும், 'திங்கட் சுடர்பட்டுக் கொப்புளங்கொண்ட குளிர்வான்' என்னும் அடியைக் கூறி உரைவிரிக்கும்

போது, கூத்தர், 'கொப்புளமாயின் சீழ்வடியவேண்டுமே' என்றார். அதற்குப் புகழேந்தியார், 'ஆம், அதுதான் பனிநீர்' என்றார். இவ்விடையும் கூத்தர் வாயை அடைத்தது. அவையோருக்கோ அளவிலா மகிழ்ச்சியை அளித்தது. அரங்கேற்றம் முடிந்ததும் குலோத்துங்கன் புகழேந்திப் புலவருக்குத் தக்க சிறப்புச்செய்து பெருமைப்படுத்தினான்.

அரங்கேற்றம் முடிந்தபின் ஒட்டக்கூத்தர் தம் வீட்டிற்குச்சென்று தமக்கு அரங்கத்தில் ஏற்பட்ட இழிவையெண்ணி மனவருத்தத்துடன் படுத்துக்கொண்டிருந்தார். கூத்தரின் மனைவி கூத்தரை யுணவு கொள்ளுமாறு அழைத்தாள். கூத்தர் பசியில்லையென்று கூறி உணவை மறுத்தார். சிறிது பாலும் பழமு முண்ணும்படி மனைவி மீண்டும் வேண்டிக்கொண்டாள். அதற்குக் கூத்தர் 'புகழேந்தியாருடைய நளவெண்பா அமுதத்தினையுண்ட எனக்கு அப்போதே பசியடங்கிவிட்டது. அந்த நளவெண்பாவின் சுவைக்குப் பாற்சுவையும் பழச்சுவையும் எந்த மூலை?' என்று பதிலிறுத்தார். இவர் செய்தி இவ்வாறாக, வீட்டிற்குச் சென்ற புகழேந்திப் புலவரோ கூத்தர் தம்மேல் கொண்டிருக்கும் அழுக்காறு எளிதில் தீராது; அவரைக் கொன்றொழிப்பதே தக்கது என்று எண்ணியவராய்க் கூத்தரின் வீட்டிற்கு ஒரு பக்கத்தில் பதுங்கிக் காலம் பார்த்துக்கொண்டிருந்தார். கூத்தர் முற்கூறியவாறு தம் மனைவியாரிடம் கூறியதை தம் காதாரக் கேட்டதும் அக்கணமே ஓடிவந்து கூத்தரைக் கட்டிப்பிடித்துக் கொண்டு மகிழ்ச்சிக் கண்ணீர் பெருகியதுடன், தாம் அங்குவந்து பதுங்கியிருந்த காரணத்தையும் அதன் பொருட்டுக் கொண்டுவந்திருந்த கருவியையும்

காட்டினார். அக்கணந்தொடங்கி இருவரும் ஆருயிர்ப் புலவர்களாயினர். இச்செய்திகளையெல்லா முணர்ந்த குலோத்துங்கன் இருவரும் நண்பர்களானமையை எண்ணிப் பெரிதும் மகிழ்ந்தான்.

பின்னும் சிலகாலம் புகழேந்திப் புலவர் சோணாட்டிலிருந்துவிட்டுப் பின் மதுரையை அடைந்து பாண்டியன் அவையிற் பன்னாளிருந்து புகழுடம்பை நிலவுலகில் நிறுத்திப் பூதவுடம்பை நீத்தார். புகழேந்திப் புலவர் முற்கூறியபடி நங்கைப் பாட்டுக்கள் பலவும், நளவெண்பாவும் பாடியிருத்தலுடன் இரத்தினச்சுருக்கம் என்னும் சிறிய உவமை நூல் ஒன்றையும் பாடியுள்ளார். நமது நாட்டுப் புலவர் பெருமக்களின் வரலாறுகள் பலவகையாக வழங்குதல் போலவே இவருடைய வரலாறும் பலவகையாக வழங்குகின்றன.

வண்டார் வளவயல்சூழ் மள்ளுவநாட் டெங்கோமான்
தண்டார் புனைசந் திரன்சுவர்க்கி—கொண்டாடும்
பாவலன்பால் நின்ற பசிபோல நீங்கிற்றே
காவலன்பால் நின்ற கலி.

—நளவெண்பா.

